ஸ்ரீ:

உத்யாந பத்ரிகையில் வெளிவந்த
இரண்டு வியாஸங்களின்மேல் ஆராய்ச்சியாக
ஸ்ரீ காஞ்சி ப்ரதிவாதி பயங்கரம்
**அண்ணங்கராசாரியர்**
எழுதிய

# 1. நரஸிம்ஹாவதார ஹேது நிர்ணயம்
# 2. விபவாவதாரசோகதத்வம்.

---

அம்ருதலஹரி வெளியீடு.

இரண்டாவது விஷயமாக அபிநவதயா சதக மென்கிற 230 ச்லோகங்கள் கொண்ட ஸம்ஸ்க்ருத நூல் தெளிவான விவரணத்தோடும் தெலுங்கு லிபியில் வெளி வந்துளது.

1947

**விலை 0-6-0**

---

இவை கிடைக்குமிடம்:—

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

ஸ்ரீரஸ்து.

# நரஸிம்ஹாவதார ஹேது நிர்ணயம்.

(ஸ்ரீ காஞ்சீ. ப்ர. அண்ணங்கராசாரியர்.)

प्रणतिविमुखदशमुखेति निगममकुटगुरुवर
प्रथितफणितिहृदयविवृतिसमयलिखितविषयगाम् ।
प्रथममहितमुनिवरोक्तिमिह हि विशदमभिगृणन्
परमरसिकहृदयममितकुतुकभरितमुपदधे ॥

ஆச்ரிதாநுக்ரஹ சீலனும் ஆச்ரிதவிரோதி நிக்ரஹ சீலனுமான எம்பெருமான் செய்தருளின அவதாரங்களுள் "எங்குமுளன் கண்ணனென்ற மகனைக் காய்ந்து, இங்கில்லை யாலென் றிரணியன் தூண்புடைப்ப, அங்கப்பொழுதே அவன் வீயத் தோன்றிய என் சிங்கப்பிரான் பெருமை ஆராயுஞ் சீர்மைத்தே" என்பது முதலான பலபல பாசுரங்களினால் ஆழ்வார்கள் அற்புதமாக அநுபவித்துப் பேசின நரஸிம்ஹாவதாரத்தின் முக்கிய காரணத்தைப் பற்றிச் சிறிது விமர்சிப்போம். இவ்வவதாரத்திற்குச் சொல்லப்படுங் காரணங்களுள் ப்ரதானமானது எதுவென்றால், பரமபக்த சிகாமணியான ப்ரஹ்லாதாழ்வான் திறத்தில் இரணியன் பட்ட அபசாரங்களைப் பகவான் பொறுத்திருக்கமாட்டாமையே— என்பதாம். இதனைப் பொய்கையாழ்வார் தமது திருவந்தாதியில் "வரத்தால் வலிநினைந்து மாதவ! நின் பாதம், சிரத்தால் வணங்கானாமென்றே?— உரத்தினால், ஈரரியாய் நேர்வலியோனாய விரணியனை, ஓரரியாய் நீயிடந்த தூன்." (90) என்கிற பாசுரத்தில் ஆலங்காரிகர்களுக்கு உயிரான த்வநி மர்யாதையினால் வெளியிட்டருளியுள்ளார். இப் பாசுரத்தின் சீரிய பொருளை ரஸிகர்கள் அநுபவித்து அகங் குழையுமாறு ஈண்டு விவரிக்க ப்ராப்தமாகிறது.

இப்பாட்டின் பின்னடிகளை முன்னம் அன்வயித்துக்கொண்டு பிறகு பின்னடிகளை அந்வயிப்பது. "மாதவ! நீ ஈரரியாய் நேர்வலியோனாய விரணியனை ஓரரியாய் ஊனிடந்தது— (அவன்) வரத்தால் வலி நினைந்து நின்பாதம் சிரத்தால் வணங்கானாமென்றே?" என்று அந்வயித்து வினாவாகப் பொருள் கொள்வது. திருமாலே! நீ நரசிங்க மூர்த்தியாய்க் கிளர்ந்து இரணியனை உடல் கிழித்துப் போகட்டதானது அவ்வரக்கன் உன்னுடைய திருவடிகளிலே தலை சாய்க்கவில்லை யென்கிற காரணத்தினாலோ? (அன்று.) என்றிவ்வளவே பாசுரத்தின் பொருள். கேள்விமாத்திரம் இங்கு உள்ளதேயன்றிக் கேள்விக்கு உத்தரம் இங்கில்லை. பரம ரஸிகர்களின் பேச்சினழகு இங்ஙனே யாயிற்று இருக்கும்படி. தம் திருவுள்ளத்திலோடுகிற அர்த்தத்தை வெட்ட வெளிச்சமாக வெளியிட்டு விடாமல் மறைத்து

வைத்துக்கொண்டு அது வெளிவர வேண்டியதான கேள்வியை மாத்திரம் இயற்றி வைப்பது ஒரு சமத்காரம். இந்த ரீதி ஆழ்வாரருளிச் செயல்களிலும் ஆசார்ய ஸ்ரீஸூக்திகளிலும் மஹா கவிகளின் காவியங்களிலும் இனிது காணக் கிடைக்கும். மாதவனே! இரணியன் உன்னிடத்தில் ஆபிமுக்யம் பண்ணவில்லை யென்பதற்காகவா அவனை நீ வதைத்தாய்? என்றுள்ள இந்த வினாவானது, "அதற்காகவன்று; பக்தர்களில் தலைவனான ப்ரஹ்லாதாழ்வானிடத்தில் அவன் கனக்க அபசாரப்பட்டானென்பதற்காகவே அவனை நீ வதைத்தது" என்கிற விசேஷார்த்த ரூபமான விடையைப் பெறுவிக்க வல்லது. இந்த வினாவுக்கு இதுதான் விடை என்பதை நம்முடைய பூருவாசாரியர்கள் பலரும் பலமுகமாக வெளியிட்டுள்ளார்கள்.

ஆழ்வாரருளிச் செயல்களில் பொதிந்துள்ள அர்த்த விசேஷங்களைப் பெரும்பாலும் வெளியிடுவதற்கென்றே ஸ்தவங்களை யருளிச்செய்த கூரத்தாழ்வான் வரதராஜஸ்தவத்தில்— यदपराधसहस्रमजस्रजं त्वयि शरण्य! हिरण्य उपावहत्। वरद! तेन चिरं त्वमविक्रियो विकृतिमर्भकनिर्भजनादगाः— யதபராத ஸஹஸ்ரமஜஸ்ரஜம் த்வயி சரண்ய! ஹிரண்ய உபாவஹத்; வரத! தேந சிரம் த்வமவிக்ரியோ விக்ருதி மர்ப்பக நிர்ப்பஜநாதகா:" என்கிற அறுபத்தெட்டாவது ச்லோகம் பொய்கையாழ்வாருடைய இந்தப் பாசுரத்தின் உட்பொருளை [விடையை] விளக்குவதற்கென்றே தோன்றியது. 'பேரருளாளனே! இரணியன் உன் திறத்தில் எத்தனையோ காலமாக எல்லை கடந்த அபராதங்களைச் செய்திருக்கச் செய்தேயும் அதனால் சிறிதும் சீற்றங்கொள்ளாமலிருந்த நீ, சிறுக்கனான ப்ரஹ்லாதனை அவன் நலிந்தது காரணமாகவன்றோ வேறுபாடுற்றாய்'— என்பது இந்த ச்லோகத்தின் ஸ்பஷ்டமான பொருள். பொய்கையார் பாசுரத்திலுள்ள வினாவுக்கு இது விடையாக அமைந்தது. எம்பெருமான் தன்னளவில் த்வேஷிக்குமவர்களைக் காட்டிலும் தன்னடியார்கள் திறத்தில் த்வேஷிக்குமவர்களையே முக்கியமாக நிக்ரஹிப்பது என்கிற மஹத்தான சாஸ்த்ரார்த்தம் வெளிவருவது இங்கு ரஸிக்கத் தக்கது. "द्विषदन्नं न भोक्तव्यं द्विषन्तं नैव भोजयेत्। पाण्डवान् द्विषसे राजन्! मम प्राणा हि पाण्डवाः— த்விஷதந்நம் ந போக்தவ்யம் த்விஷந்தம் நைவ போஜயேத்; பாண்டவாந் த்விஷஸே ராஜந் மம ப்ராணா ஹி பாண்டவா:" என்கிற கண்ணபிரானுடைய உக்தியைக் கொண்டும், "त्वयि किञ्चित्समापन्ने किं कार्यं सीतया मम? — த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம?" என்கிற இராமபிரானுடைய உக்தியைக் கொண்டும் இந்த சாஸ்த்ரார்த்தத்தை நம் ஆசார்யர்கள் நிலையிட்டார்கள்.

ஸ்ரீவசநபூஷணத்தில்— "ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமையென்று ஜீயர் அருளிச் செய்வர்" என்றுள்ள ஸ்ரீஸூக்தி இந்த சாஸ்த்ரார்த்தத்தைச் செவ்வனே வெளியிடுவது. இந்த சூர்ணிகையின் பொருளாவது— ஸங்கல்ப மாத்ரத்தாலே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல ஸர்வ சக்தியான ஸர்வேச்வரன் தன்னையழிய மாறி இதர ஸஜாதீயனாய் அவதரித்துக் கை தொட்டுச் செய்த ஹிரண்ய ராவணாதி நிரஸநமாகிற அதிமாநுஷ சேஷ்டிதங்களெல்லாம்— ப்ரஹ்லாதாழ்வான் மஹர்ஷிகள் முதலான பாகவத விஷயங்களில் அவ்வவர்கள் பண்ணின அபசாரம் ஸஹியாமையாலே யென்று

கஞ்சியர் அருளிச் செய்வர்— என்பதாம். "परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम्— பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்" என்கிற கீதா ச்லோகத்தில் எம்பெருமானுடைய அவதாரத்திற்கு ப்ரயோஜநமாக ஸாது பரித்ராணமும் துஷ்க்ருத் விநாசநமும்...... சொல்லப்பட்டன. இவற்றுள் துஷ்க்ருத் விநாசனமானது [ஹிரண்ய ராவணாதிகளைக் கொலை செய்வது] ஸங்கல்பத்தினாலும் ஸாத்யமென்றும், ஸாது பரித்ராணமானது அப்படி ஸங்கல்ப ஸாத்ய மன்றிக்கே நேர் கொடு நேரே அவதரித்தே செய்யக் கூடியதென்றும், ஆகவே ஸாது பரித்ராணந்தான் அவதாரத்திற்கு ப்ரதாந ப்ரயோஜந மென்றும் ஸ்ரீ பாஷ்யகாரர் முதலான ஆசார்யர்கள் ஏக கண்டமாக நிர்வஹிப்பர்கள். ஆனாலும், ஸாது பரித்ராண மென்பதை விவரிக்குமிடத்து, அநிஷ்ட நிவாரணமும் இஷ்டப்ராபணமும் சேர்ந்தே பரித்ராணமாகுமாதலால் அநிஷ்டநிவாரணம் செய்யாதவளவில் பரித்ராணம் பூர்த்தி பெறாதாதலால் அநிஷ்டநிவாரணமும் மிக முக்கியமான காரியமாயிற்று. இது ஸங்கல்பத்தாலேயே செய்யக் கூடியதாயிருக்கச் செய்தேயும் எம்பெருமான் அடியார்களிடத்து வைத்த அன்பு மிகுதியினால் ஸங்கல்பத்தால் செய்துவிடாமல், கண்காண வந்து நேர்நின்று போர்புரிந்து சித்ரவதங்களைப் பண்ணியே திருவுள்ளத்தில் தேறுதலடைகின்றானென்று பிரமாணங்களினால் தெரியவருவதால் பக்தவத்ஸலனான பகவான் பக்த விரோதிகளை நிரஸிப்பதற்காகவே திருவவதாரங்கள் செய்தருள்கின்றானென்றும் அறுதியிட வேண்டிற்றாயிற்று.

அஸுர ராக்ஷஸப்ரக்ருதிகள் பகவானிடத்தில் நேராகவே விரோதிப்பவர்களுமுண்டு; பகவத் பக்தர்களை விரோதிப்பவர்களுமுண்டு. கம்ஸனைப் பற்றிச் சொல்லுகையில், பெரியாழ்வார் "தீய புந்திக்கஞ்சனுன் மேல் சினமுடையன் சோர்வு பார்த்து, மாயந்தன்னால் வலைப்படுக்கில்" என்று அவன் பகவத் விரோதியென்று பேசினார். நம்மாழ்வார் "சாதுசனத்தை நலியுங் கஞ்சனைச் சாதிப்பதற்கு ஆதியஞ் சோதியுருவை யங்குவைத்திங்குப்பிறந்த" என்ற பாசுரத்தில் அவனை பாகவத விரோதி யென்றே விளக்கினார். இங்ஙனே இரண்டு விதமான தன்மைகள் ஆஸுர ப்ரக்ருதிகளுக்கு இருக்கவும், எம்பெருமான் "न स्मरत्यपकाराणां शतमप्यात्मवत्तया— ந ஸ்மரத்யபகாராணாம் சதமபி ஆத்மவத்தயா" என்று புகழப்பட்ட குணக்கடலாதலால் தன் விஷயத்தில் தீங்கு செய்பவர்களிடத்தில் சீற்றங் கொள்ளாமல் தன்னடியார்களிடத்தில் தீங்கு செய்பவர்களையே களைந்தொழிக்கக் கிளர்கின்றானென்றால் இதுவன்றோ மிகச் சிறந்த மஹா குணம்.

தண்ணளியில் தண்ணீர்போன்ற பகவானுக்குப் பகைவர் இருக்கமுடியாது. கீதையில் "समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः— ஸமோஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய:" என்கிறான் எம்பெருமான் தானே. "देवानां दानवानां च सामान्यमधिदैवतम्— தேவாநாம் தாநவாநாம் ச ஸாமாந்யமதிதைவதம்" என்று துதிக்கிறான் நான்முகன். இப்படிப்பட்ட பகவான் சிலரையோ பலரையோ விரோதிகளாகக் கொண்டு நலிகிறானென்றால், இதை எங்ஙனே பொருந்தவைக்க வேணும் தெரியுமோ? தன்னடியார்களுக்கு த்ரோஹம் செய்பவர்களைத் தனக்கு த்ரோஹிகளாகத் தான் நினைக்குமவனாகையாலே— என்று இவ்விஷயம் பலபல

ப்ரமாண உபபத்திகளுடன் ஸ்ரீ தேசிகனுட்பட ஸகல ஆசார்யர்களாலும் ஸ்தாபிக்கப் பட்டுள்ளது.

"तानहं द्विषतः क्रूरान् संसारेषु नराधमान्। क्षिपामि— தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந், க்ஷிபாமி" என்பது முதலான ப்ரமாணங்களினால் ஏற்படுகிற அர்த்தத்திற்கு இவ்வர்த்தம் சிறிதும் விரோதியன்று. "ज्ञानी त्वात्मैव मे मतम्— ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்கிற ச்லோகமொன்றை யெடுத்துக் கொள்வோம். "ஜகத் ஸர்வம் சரீரம் தே" என்பது முதலான பல ப்ரமாணங்களினால் ஸகல பதார்த்தங்களும் பகவானுக்கு சரீரபூதங்களென்றும், பகவானொருவனே உயிர்க்கும் உயிரானவனென்றும் அசைக்க முடியாதபடி தேறியுள்ள விஷயம். இஃது இப்படியிருக்க "ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்கிறான் தானே. இங்கு மே மதம் என்றதன் ஸ்வாரஸ்யத்தை தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்வாமி தேசிகன் வெகு அற்புதமாக எடுத்துக்காட்டுகின்றார். கீதையில் கண்ணன் சோதிவாய் திறந்து தான் சொல்லுகிற அர்த்தமெல்லாம் தன்னுடைய மதமாயிருக்க, இங்கு விசேஷித்து மே மதம் என்ன வேண்டுமோ? எதற்காக இங்கு மே மதமென்றுரைனென்னில்; "अयमर्थः त्रय्यन्तसिद्धान्तो भवतु वा मा वा; कृष्णसिद्धान्तस्तु अयमिति भावः—" இவ்வர்த்தம் வேதாந்தங்களுக்கு இணங்கின ஸித்தாந்தமாக இருந்தாலிருக்கட்டும்; இல்லாமற் போனால் போகட்டும்; தேர்த்தட்டிலே கண்ணபிரானாக வீற்றிருந்து சொல்லுகிற என்னுடைய ஸித்தாந்தம் இதுவே— என்பதாக ஸ்ரீ க்ருஷ்ண ஹ்ருதயத்தை விவரித்தருளினார் நம் தேசிகர். இதனால், ஸகல சாஸ்த்ரங்களும் ஒரு தட்டாய் "ஜ்ஞாநீது ஆத்மைவ" என்கிற இவ்வசனம் ஒரு தட்டாய் இதுவே மேன்மை பெற்றதென்று தேறிற்று. இங்ஙனே பெருமானை நோக்கி "द्वितीयं मेऽन्तरात्मानं त्वाम्— த்விதீயம் மேந்தராத்மாநம் த்வாம்" என்று பெருமாளருளிச் செய்ததைக் கொண்டும் ஆசார்யர்கள் ரஸமயமான அர்த்தத்தை வெளியிட்டுள்ளார்கள். ஸ்தோத்ர ரத்நத்தில் "महात्मभिर्मामवलोक्यतां नय क्षणेऽपि ते यद्विरहोऽतिदुस्सहः— மஹாத்மபிர் மாம் அவலோக்யதாம் நய க்ஷணேபி தே யத்விரஹோதிதுஸ்ஸஹ:" என்ற ஸ்ரீஸூக்தி ரத்நத்தில் இவ் வர்த்த விசேஷங்களெல்லாம் ஜ்வலிக்கும். பகவத்விஷய திவ்யக்ரந்தத் தெளிவுற்றுத் தேறித் தெளிந்தவர்களுக்கே நிலமான இவ்வர்த்த விசேஷங்கள் பிறர்க்கு ரஸிக்க விரகில்லை.

பகவான் தன்னிடத்தில் ஸாக்ஷாத் பக்தி செய்யும் அன்பர்களிற் காட்டிலும் "அடியாரடியார் தம்மடியார் தமக்கடியாரடியார் தம் அடியாரடியோங்களே" என்றும் "த்வத் ப்ருத்ய ப்ருத்ய பரிசாரக ப்ருத்ய ப்ருத்ய ப்ருத்யஸ்ய ப்ருத்ய:" என்றும் இருப்பார் திறத்திலே ["यस्सप्तपर्वव्यवधानतुङ्गां शेषत्वकाष्ठामभजन्मुरारेः" என்று பாதுகா ஸஹஸ்ரத்தில் பணிக்கும்படி பரம காஷ்டாபந்நமான சேஷத்வத்தில் ஊன்றி யிருக்குமவர்களிடத்திலே] அளவுகடந்த வாத்ஸல்ய முடையவன் என்றால் இதில் யாருக்காவது விப்ரதிபத்தியுண்டோ? விவாதமுண்டோ? இது போலவே, பகவான் தன்னிடத்தில் தீமை செய்யுமவர்களிற் காட்டிலும் தன்னடியாரடியாரடியார் திறத்தில் தீமை செய்யுமவர்களிடத்தில் அதிகமான நிக்ரஹருசியை யுடையவன் என்றால் இதில் என்ன விப்ரதிபத்தி? என்ன விவாதம்?

தேசிகன் யதிராஜ ஸப்ததியில் "अनुकल्पभूतमुरभित्पदं सताम्...शरणं यतीन्द्रचरणं वृणीमहे— அநுகல்பபூதமுரபித்பதம் ஸதாம்... சரணம் யதீந்த்ர சரணம் வ்ருணீமஹே" என்கிறார். ஸத்துக்கள் வணங்குதவற்கு எம்பெருமானுடைய திருவடிகள் கௌண பக்ஷமேயல்லது முக்ய பக்ஷமல்லவென்றும், ஸ்ரீபாஷ்யகாரருடைய திருவடிகளே முக்யபக்ஷமென்றும் இதனால் நிஸ்ஸந்தேஹமாய் ஸுஸ்பஷ்டமாய்க் கிடைக்கிறது. பகவானுடைய திருவடிகளை முக்யகல்பமாகக் கொண்டு வரிப்பவர்கள் ஸத்துக்களல்லர், அஸத்துக்கள் என்று கூட இதனால் தேறுகிறது. இதைப் பற்றி விசாரமெடுத்துக் கொள்ள வேண்டியதும் அவசியம். பிறர், இதெல்லாம் அதிவாதமென்றே யிகழ்வர். அவர்களுக்கு இது தவிர வேறு வழியில்லை. ஸகல சாஸ்த்ர ஸாரஜ்ஞர்களோ வென்னில், இதுதான் வடிக்கட்டின சாஸ்த்ரார்த்தமென்று புகழ்வர்களே யன்றி இகழார்கள். "அன்பர்க்கே யவதரிக்கு மாயன் நிற்க அருமறைகள் தமிழ் செய்தான் தாளே கொண்டு, துன்பற்ற மதுரகவி தோன்றக் காட்டும் தொல்வழியே நல்வழிகள் துணிவார்கட்கே" என்றும் கல்வெட்டாக தேசிகன் அருளிச் செய்திருப்பது ஆராயத் தக்கது. இவர் தாம் இப்படி யருளிச் செய்தது— "உண்ட போதொரு வார்த்தையும் உண்ணாத போதொரு வார்த்தையும் சொல்லுவார் பத்துப் பேருண்டிறே; அவர்கள் பாசுரம் கொண்டன்று இவ்வர்த்தம் அறுதியிடுவது; அவர்களைச் சிரித்திருப்பாரொருவருண்டிறே; அவர் பாசுரங் கொண்டு இவ்வர்த்தம் அறுதியிடக் கடவோம்." என்கிற ஸ்ரீவசந பூஷண திவ்ய ஸூக்தியில் வாஸனையில்லாததால் அந்தப் பாசுரமும் அதிவாதமென்றிட்டு இகழவும் பிறர் ஸஜ்ஜர்களென்பதை நன்கறிவோம். "அன்னவர்களால் இகழப்படுகை தானே சிறந்த சாஸ்த்ரார்த்தமென்கைக்கு முக்கியமான அறிகுறி" யென்று ஞானப் பிரான் வார்த்தை. இதை நியமேந எஞ்ஞான்றுமெங்கும் பார்த்துக் கொள்ளலாம். தேசிகனுட்பட ஸகல ஆசார்யர்களும் ஏகவசநமாகவும் நிஷ்கண்டகமாகவும் நிலைநாட்டியுள்ள சாஸ்த்ரார்த்தங்களையே ஆக்ஷேபிக்கவும் அதிக்ஷேபிக்கவும் பிறர் தீக்ஷ்ணர்களென்பது புநருக்தம்.

ப்ரக்ருதம் விசாரத்திற் கொண்ட பொய்கையார் பாசுரத்திற்கு நாம் விவரித்ததே நற்பொருள் என்பது பூருவர்களின் வியாக்கியானத்தினாலும் ஸித்தம். அப்பிள்ளையுரை ஸ்ரீஸூக்திகள் வருமாறு:— "நாட்டில் கண்டறியாத அத்விதீயமான ந்ருஸிம்ஹமாய்க் கொண்டு அவனுடைய மாம்ஸளமான பெரிய சரீரத்தை ஆச்ரித வத்ஸலனான நீ இடந்து போகட்டது ப்ரஹ்மாதிகள் கொடுத்த வரத்தால் வந்த தன் மிடுக்கைக் கனக்க நினைத்து ஸர்வாதிகனான வுன்னுடைய திருவடிகளைத் தலையாலே வணங்கி ஆச்ரயியாதே யிருந்தான் என்றோ? அன்றிறே; சிறுக்கனைப் பலவாறு கறுவி நலிந்தானென்னுமிது கொண்டிறே யென்றபடி." என்று.

பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் ஸம்க்ஷிப்தமாதலால் அதற்கு விசதீகரணமாகவே மேற்குறித்த உரை ஸ்ரீஸூக்திகள் அவதரித்துள்ளன. பெரியவாச்சான் பிள்ளை அவதாரிகையிலேயே உயிர் நிலையை விளக்கியருளினார். அதாவது— "(வரத்தால்) நரஸிம்ஹ ரூபியான ஈச்வரனுடைய ஆச்ரித விரோதி நிரஸந சீலத்

தையும் வாத்ஸல்யத்தையும் அநுஸந்திக்கிறார்" என்பது அவதாரிகை. இங்கு ஆச்ரித விரோதி யென்கிற சொல்லுக்கு மூலத்தில் ஸ்தானமேதென்று பார்க்க வேணும். மூலத்தில் என்றே! என்கிற வினாவினால் விளங்கும் பொருளைப் பெரியவாச்சான் பிள்ளை [மேல் வியாக்கியானத்தில்] இரண்டு வகையாக நிரூபித்தருளியுள்ளார். சிறுக்கனான ப்ரஹ்லாதன் விஷயத்தில் பரிவு தப்பி நடந்து கொண்டதற்காகவே என்பது ஒரு பொருள். [உன் வந்து அழியாமைக்கு என்று மற்றொரு பொருள். இதைப்பற்றின விவரணம் இங்கு அநபேக்ஷிதமென்று விடுக்கப்பட்டது.]

இந்தப் பாசுரத்தை வியாக்கியானிப்பவராகவே கூரத்தாழ்வான் வரதராஜஸ்தவத்தில் " **यदपराध सहस्रम** இத்யாதிச்லோகமருளிச் செய்தாரென்னுமிடத்தை நம்முடைய திருவந்தாதி திவ்யார்த்த தீபிகை கொண்டும் வரதராஜஸ்தவ வியாக்கியானங் கொண்டும் விளக்கமாக அறிவது.

அருளிச் செயலுக்கு வைதேசிகர்களும் சொற்சுவை பொருட்சுவை யொன்றிலும் நாமத்ஞானமில்லாதவர்களுமான பிறர் இப் பாசுரத்திற்குக் கொள்ளும் பொருள் அநுவாதத்திற்கும் அநர்ஹமானது. "நின்பாதம் சிரத்தால் வணங்கானுமென்றே" என்றதை ப்ரதிக்ஷேபார்த்தமான வினாவாகக் கொள்ளாமல் ஹேது நிர்ணயகமாகக் கொள்வர் பிறர். இரணியன் உன் திருவடிகளிலே தலை சாய்க்கவில்லையென்கிற காரணத்தினாலேயே அவனை நீ வதைத்தாய் என்று சொல்லுவதுதான் இப்பாசுரத்தின் ப்ரமேயம் என்பதாகப் பிறரது கூற்று. அவர்களது கொள்கை அங்ஙனமேயாகுக. பிரானே! உன்னளவில் பிறர் படும் அபசாரங்களை நீ பொருள் படுத்துவாயல்லை; உன்னடியார்கள் பக்கலிலே அபசாரப் படுமவர்களை க்ஷமிக்ககில்லாய்— என்று ஆசார்யர்கள் சுவைமிக நிர்வஹிக்கும் பொருளில் அவர்களுக்கு விப்ரதிபத்தி யுதிக்கக் காரணமென்ன? என்பதொன்றே நமக்கு ஜிஜ்ஞாஸிதம்.

ஸாமான்யமாக உலகில், ஒருவர் தம் பக்கல் குற்றம் செய்பவர்களிடத்தில் பொறுமையுடனிருந்து தம்முடையார்கள் பக்கல் குற்றம் செய்பவர்களிடத்தில் சீறிச் சிவந்து சிதைக்கின்றாரென்றால் இது மிகச் சிறந்த குணமாகக் கொண்டாடப் படுகின்றதென்பதில் யார்க்கும் விவாதமில்லை. இக்குணம் குணக்கடலான எம்பெருமானிடத்தில் எதனால் அஸஹ்யமாகிறதென்றறிகின்றிலோம்.

" **भक्तस्य दानवशिशोः परिपालनाय भद्रां नृसिंहकुहनामधिजग्मुषस्ते**— பக்தஸ்ய தானவசிசோ: பரிபாலநாய பத்ராம் ந்ருஸிம்ஹகுஹநாமதிஜக்முஷஸ்தே" என்கிற தேசிக திவ்ய ஸூக்தி ப்ரஸித்தம். பக்தனான சிறுக்கனிடத்தில் பரிவினாலேயே நரசிங்க வுருக் கொண்டதாக அருளிச் செய்யப்படுகிற விதில் என்ன பொருமையோ அறியோம். பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் " **निजभक्तद्रुहि रुषः प्रकर्षाद्विगुणत्वद्विगुणपरिणाहोत्कटतनुः**— நிஜபக்தத்ருஹி ருஷ: ப்ரகர்ஷாத் விகுணத்வத்விகுண பரிணாஹோத்கடதநு:" என்று அருளிச் செய்திருப்பது முதலானவற்றைப் பன்னியுரைக்கும் காற் பாரதமாம்.

## இந்த வியாஸத்தின் ஸார ஸங்க்ரஹ ரூபமான உபஸம்ஹாரம்.

1. எம்பெருமான் தன் திறத்தில் தீங்கு செய்யுமவர்களைக் க்ஷமிக்க மாட்டான், தன்னடியார் திறத்தில் தீங்கு செய்யுமவர்களைச் சித்ரவதம் பண்ணியே திருப்தி பெறுவன்—என்பதுதான் சாஸ்த்ரார்த்தம்.

2. பகவதபசாரம் மாத்திரமே யுள்ளவர்களென்று சிலரை எடுத்துக்காட்டி இவர்களையும் பகவான் வதம் செய்திருக்கையாலே மேற்கூறிய நியமம் வ்யாஹதம் என்பார்க்கு இரண்டு வகையான ஸமாதானம் காண்மின். 1. பகவானைப் பாகவதர்கள் உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலை யெல்லாமாகக் கொண்டவர்களாதலால் பாகவத த்ரோஹமின்றிக்கே பகவதபசாரம் மாத்திரமே யுள்ளவர்களென்று சிலரைக் காட்டவே முடியாது. காட்டுகிறோமென்றால் அது மருளே. 2. தன்னளவில் தீங்கு செய்யுமவர்களைக் க்ஷமிக்க மாட்டானென்றதற்குத் தாத்பர்யம்—பாகவத த்ரோஹிகளிடத்தில் அபரிமிதமான கறுவுதல் கொண்டவன் என்பதே.

3. “வணங்கலிலரக்கன் செருக்களத்தவிய... அமர் செய்த வடிகள்” என்பது முதலான பல பாசுரங்களில் ‘வணங்காமன்னனான இராவணனைத் தொலைத்த பெருமான்’ என்று சொல்லப் படுகிறது. இங்கு யாரை வணங்காதவன்? என்றால், தன்னை வணங்காதவன் என்று பொருள் கூறுமவர்களும் இப்படித்தான் பொருள் கூறவேணுமென்று ஆக்ரஹிக்குமவர்களும் பக்த ப்ராணனான பகவானுடைய தன்மை யறியாதாரத்தனை. தன்னருகிலும் வாராமல் தன்னடியார்களுக்கே தொண்டு செய்வாரிருந்தால் அவர்களை மிக வுகப்பதும், தன்னடியாரருகில் செல்லாமல் தன்னையே வணங்கி வழிபடுமவர்களை உகவாதொழிவதும் எம்பெருமானுடைய உண்மை ஸ்வரூபம். இதற்கிணங்கின அர்த்த நிஷ்கர்ஷமே அழகியது.

4. பாகவத த்ரோஹிகளையே ஸ்வ த்ரோஹிகளாகக் கொள்பவன் பகவான்; பகவத் த்ரோஹிகளையே ஸ்வ த்ரோஹிகளாகக் கொள்பவர் பாகவதர்கள்—என்று தேசிகாதிகள் வடிக்கட்டி விளக்கியுள்ள சாஸ்த்ரார்த்த ஸாரத்தில் ப்ரதிபத்தி யில்லாதவர்கள் “வாக்ய ந்யாய விருத்தம்” என்று தலை தடுமாறாக எழுதுவதெல்லாம் வஞ்சக வாக் ஜாலமே. பணிய விசையாத தசமுகன் என்பதற்கு—தன்னைப் பணியாதவனென்று சுவைக் கேடான பொருளைக் கொண்டாலும் உண்மையில் தமரைப் பணியாதவர்களே தன்னைப் பணியாதவர்களாதலால் ‘தமரைப் பணியாத’ என்பதுதான் எமது கருத்தும் என்று அவர்கள் கூறி அஞ்சலித்து நிற்றல் தகும்.

5. முடிவான வார்த்தை இது கேளீர். இரணியனுக்கு பகவதபசாரம் பாகவதாபசாரம் என்கிற இரண்டு முண்டு. பகவதபசாரத்திற்காக அவன் கொலையுண்டானென்று கூறினால் இக் கூற்றில் ப்ரத்யவாய மொன்றுமில்லை. நம்மாழ்வார் திருவாய்மொழியில் (2-6-6) *உன்னைச் சிந்தையினாலிகழ்ந்த இரணியனகல்மார்வங் கீண்ட* என்றுமருளிச் செய்துள்ளார். இதனால் பகவதபசாரத்திற்காக அவன் நிரஸிக்கப்பட்டானென்று கூறப்பட்டதாயிற்று. பாகவதாபசாரத்திற்காகவே அவன் கொல்லப்பட்டானென்பதற்கு இது விரோதியன்று. உலகில்

ஒரு காரியத்திற்குப் பலஹேதுக்களும் ஸம்பாவிதமே. ஆனால் அந்த ஹேதுக்களில் சிலவற்றுக்கு ப்ராதாந்யமும் சிலவற்றுக்கு அப்ராதாந்யமும் உள்ளதென்பது நிர்விவாதம். ப்ரக்ருத விஷயத்தில் பாகவதாபசாரம் ப்ரதாந ஹேதுவாயும் பகவதபசாரம் அப்ரதாந ஹேதுவாயும் மஹர்ஷிகளாலும் ஆழ்வார்களாலும் ஆசார்யர்களாலும் கொள்ளப்பட்டிருக்கிறது. பகவதபசாரத்திற் காட்டிலும் பாகவதாபசாரம் மிகக் கொடிது என்பதே இதற்கு மூலகாரணம். "**திமிர் நீல திமிங்கிலோ கிலதி**" என்கிற ஸங்கல்ப ஸூர்யோதய ச்லோகத்தினாலும் இது விசதமாகும். ப்ரதான காரணத்தைக் கூறுவதை விட்டு அப்ரதான காரணத்தை நம்மாழ்வார் ஏன் அருளிச் செய்தாரென்று சிலர் கேட்கவுங்கூடும். இதினின்றும் ஒரு ரஸமான அர்த்தம் கிடைக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றியேயாம். அவ்வர்த்தம் யாதென்னில்; கேண்மின்;

மேலெடுத்த நம்மாழ்வார் பாசுரத்தில் "உன்னைச் சிந்தையினாலிகழ்ந்த இரணியன்" என்றுள்ளது. 'உன்னை யிகழ்ந்த இரணியன்' என்றால் போராதோ? சிந்தையினால் என்று அதிக பதம் எதற்காக? என்று ஆராயவேண்டும். இங்கு நம்பிள்ளை யருளிச் செய்யும் அர்த்த விசேஷத்தைச் சொலப்புகில் வாயமுதம் பரக்கும். ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—

"[**உன்னைச் சிந்தையினாலிகழ்ந்த**] உக்திமாத்ரமன்றிக்கே நெஞ்சாலே யிகழ்ந்தானாயிற்று. இத்தால்— அவன் விடுவது புத்தி பூர்வம் ப்ராதிகூல்யம் பண்ணினாரை. கைக்கொள்ளுகைக்கு மித்ரபாவமே யமையும்." என்று. இதைச் சிறிது விவரிப்போம். அநுகூலர்களை அநுக்ரஹிப்பதும் ப்ரதிகூலர்களை நிக்ரஹிப்பதும் செய்யாநின்ற எம்பெருமான் (1) அநுகூலர்களிடத்தில் ஹ்ருதய பரிபூர்ணமான ஆநுகூல்யத்தை எதிர்பார்த்து அநுக்ரஹிப்பதில்லை; மேலெழுந்த கபட பக்தியிருந்தாலும் அதையே மிகையாகக் கொண்டு அநுக்ரஹிப்பன். (2) இங்ஙனம் ப்ரதிகூலர்களிடத்தில் மேலெழுந்த ப்ராதிகூல்யத்தைக் கொண்டு நிக்ரஹிப்பதில்லை; அந்தரங்கத்திலும் பகை யிருக்கிறதா வென்று பார்த்தே நிக்ரஹிப்பன். முந்தின விஷயத்திற்கு ப்ரமாணம்— "**மித்ரபாவேந** ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந" என்பது. பிந்தின விஷயத்திற்கு ப்ரமாணம் "**உன்னைச் சிந்தையினா லிகழ்ந்த**" வென்கிற இந்தப் பாசுரம். "உளம் தொட்டு இரணிய னொண்மார்பகலம் பிளந்திட்ட" என்ற பெரியாழ்வார் ஸ்ரீஸூக்தியிலும் இச்சீரிய பொருள் கிடைக்கும். அநுக்ரஹம் செய்கைக்கு அற்ப ஹேது இருந்தாலும் போரும்; நிக்ரஹம் செய்கைக்கு அது போராது; அபரிமிதமான ஹேது இருக்கவேணும் என்பதே எம்பெருமான் திருவுள்ளமென்று இதனால் சிக்ஷிதமாகிறது. இதுவொரு சிறந்த மஹா குணமன்றோ. அல்ப ஹேதுவையும் பெரிதாக்கி அநுகூலர்களைக் கைவிடுவதும், அபரிமிதமான ப்ரீதி ஹேது இருந்தாலும் அதை நெஞ்சிற் கொள்ளாமல் வெறுப்பதுமான அஸ்மதாதிகளின் துர்குணமெங்கே! பகவானுடைய மஹா குணமெங்கே! என்று உருகுவர்கள் குணாநுரக்தர்கள்.

இது போலவே, ஸாக்ஷாத்தாக நம்மிடத்திலே தீங்கு செய்பவர்களை மாத்திரம் நிக்ரஹிப்பதும், பிற பெரியார்களிடத்தில் அபசாரப் படுமவர்களைப் பற்றி

ஒன்றும் கணிசியாமலிருப்பதுமான அஸ்மதாதிகளின்படி யெங்கே! ஸாக்ஷாத்தாகத் தன்னளவில் தீங்கு செய்பவர்களைப் பற்றிக் கணிசியாதே பரம பாகவதர்களிடத்தில் அபசாரப் படுமவர்களை வேரோடே களைந்தொழிக்கு மெம்பெருமான்படி யெங்கே! என்றும் உள் குழைவர்கள். இவ்விரண்டு மஹாகுணமும் நரஸிம்ஹாவதாரத்திலே ரஸிகர்களால் அநுபவிக்கப் படுகின்றன. இப்படிப்பட்ட மஹாகுணங்களைக் காட்டுதற்கே யாயிற்று நரஹரி யவதாரம்.

---

# விபவாவதார சோக தத்வநிரூபணம்

*[ப்ர-அ.]*

## சிஷ்யாசார்ய ஸம்வாதம்.

*[ராமாவதாரம் முதலிய விபவாவதாரங்களில் எம்பெருமான் அன்பர்களின் துக்கத்தைக் கண்டு தானும் துக்கப்பட்டதாகச் சொல்லியிருக்கும் பிரகரணங்களில் உண்மைப் பொருளைத் தெரிந்து கொள்ள விரும்பிய சிஷ்யன் ஆசார்யனிடம் நினவடங்கக் கேட்டுத் தெரிந்து கொள்ளுதலை விசதமாக வெளியிடுதல்.]*

சிஷ்யன்: ஸ்வாமிந்! எம்பெருமானை தயாளுவென்று துதிக்கிறோம். தயையாவது பிறர் படும் துக்கத்தைக் கண்டு தானும் துக்கப்படுகை என்று பூர்வாசாரியர்களின் கொள்கையாம். இப்படிச் சொல்லுவது யுக்தமன்றாகையாலே பிறர் படும் துக்கத்தைப் பரிஹரிக்க வேணுமென்கிற விருப்பமே தயையென்று சொல்ல வேணுமென்று சில ஆசாரியர்களின் கொள்கையாம். இவ்விஷயத்தில் அடியேனுக் குண்டான ஸந்தேஹங்களை நீக்கித் தெளிவு பெறுத்த வேணுமென்று பிரார்த்திக்கின்றேன். அவகாசமிருக்குமோ?

**ஆசார்ய:** அவகாசமில்லாமலென்ன? பகவத் குணாநுபவமும் பகவத்குண விசாரமும் செய்தே போது போக்கக் கடமைப் பட்டிருக்கின்ற நமக்கு இத்தகைய விசாரம் விளைந்தால் பரம ஸந்தோஷம். நம்முடைய அவகாசமெல்லாம் இத்தகைய விசாரங்களிலேயே பெரும்பாலும் செல்லுமாகில் "தொப்ப தெமக்கின்பமில்லை. "போதயந்த:பரஸ்பரம்" என்று கீதையிற் கூறிய கட்டளை இன்று வாய்க்கப் பெற்றதற்கு மிக மகிழ்கின்றேன்.

சிஷ்: பரமாநுக்ரஹம். தந்யோஸ்மி. ஸந்தேஹங்களை க்ரமேண விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன். த்ருப்திகரமாக ஸமாதானங்களருளிச் செய்ய வேணும். பிறர் படும் துக்கத்தைப் பரிஹரிக்க விரும்புந் தன்மை எம்பெருமானிடத்திலுள்ளது என்பதில் யார்க்கும் விவாதமில்லை. அல்லும் பகலும் அன்பர்களின் துயரங்களைத் தொலைப்பதொன்றிலேயே தீக்ஷிதனாயுள்ள எம்பெருமானுக்குப் பரதுக்க நிராகரணேச்சை யுள்ளதென்பது ஆக்ஷேபிக்கத் தகுந்த விஷயமேயன்று. ஆனால் எம்பெருமானுக்கு அது ஒரு தனிப்பட்ட குணமேயல்லது தயை யென்னுஞ் சொல்

துக்கு அது ஆர்த்தமன்று என்பதை அடியேன் நன்குணர்ந்திருக்கிறேன். ஆனால், தயையுள்ளவன் சக்தனுமாயிருந்தால் அவன் பரதுக்க நிராகரணத்தில் விருப்பமும் முயற்சியும் கொள்ளுகிறான். அவனே அசக்தனாயிருந்தானாகில் துக்க நிவாரணத்தில் முயற்சி கொள்ள ப்ரஸக்தி யில்லாமையாலே 'ஐயோ! இவனுக்கு இப்படி துக்கமுண்டாயிற்றே!' என்று தானும் துக்கிப்பதோடு நிற்கிறான். ப்ரக்ருதம் ஸர்வேச்வரனைப் பற்றி விசாரமாகையாலும் அவன்தான் அப்ரமேய சக்தி யுக்தனாகையாலும் அந்த சக்தியைக் கொண்டு பரதுக்க நிராகரணம் பண்ண ப்ராப்தமாயிருக்க, தானும் துக்கிக்கிறானென்று சொன்னால் இது பொருத்தமாகத் தோன்றவில்லையே, இதுதான் அடியேனுக்குப் பெரிய சங்கை.

**ஆசா:** நீ கேட்டது மிக நன்று. இதற்குச் சிலர் லேசாக ஸமாதானம் சொல்லிவிடுவார்கள். எம்பெருமான் ஸர்வசக்தனே யாகிலும் அசக்தன் போல் பாவனை காட்டி வந்திருப்பதனால் துக்கிக்கக் குறையில்லை என்று சொல்லி விடுவார்கள். இதுவன்று இங்குச் சொல்லத் தக்கது. நம் ஆசார்யர்கள் தெரிவித்திருப்பதைச் சொல்லுகிறேன் கேள். ஸர்வசக்தனுக்குங் கூட நிராகரிக்கவொண்ணாத துக்கமுண்டு; துக்கம் இரண்டுவிதம்; கடந்துபோன துக்கமென்றும் இனிமேல் விளையப்போகிற துக்கமென்றும்.— வர்த்தமான துக்கத்தையும் சேர்த்து மூன்றாகக் கணக்கிடவுமாம். ஸர்வசக்தனான எம்பெருமான் அடியார்களின் வர்த்தமான-பவிஷ்யத் துக்கங்களைப் போக்க சக்தனானாலும் பூதகாலத்திய துக்கங்களுக்கு அநுதபிக்க வேண்டியது தவிர வேறு பரிஹாரம் செய்யமுடியாதன்றோ. சைதந்ய முள்ளவிடத்திலே இந்த அநுதாபம் இருந்தே தீரும். எம்பெருமான் கஜேந்த்ராழ்வானுடைய கூக்குரல் கேட்டுத் திருநாட்டிலிருந்து அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்த கதை உனக்குத் தெரியுமன்றோ? இதுவும் ஒரு அவதாரமே. இது, தன்னுடைய சக்தியை மறைத்து வைத்திட்டு அசக்திபாவனையோடு செய்த அவதாரமன்றே. உள்ளதான சக்தியைக் கொண்டு கஜேந்த்ரனுடைய ஆர்த்தியை அடுத்த க்ஷணத்தில் பரிஹரிக்கக் காண்கிறோமே. ஆனாலும் அப்படி துக்க பரிஹாரம் செய்வதற்கு முந்திய க்ஷணம் வரையில் அப்பெருமான் அந்த கஜராஜனுக்காகப் பட்ட துக்கம் வாசாமகோசரம். அப்போது அப்பெருமானை நாம் நேரில் காணக் கொடுத்துவைக்கவில்லை; உட்கண்ணாலே காணப் பெற்ற ஸூக்திகள் சொல்லியிருப்பதையே நாம் தெரிந்துகொள்ளுகிறோம். *स्रग्भूषाम्बरमयथायथं दधानो धिङ्मामित्यनुगजगर्जमाजगन्थ— ஸ்ரக்பூஷாம்பர மயதாயதம் ததாநோ திங் மாமிதி அநுகஜகர்ஜமாஜகந்த* என்கிறார் பட்டர். கஜேந்த்ரனது கூக்குரலைக் கேட்டுப் பதறிப் பயணமெடுத்து வரும்போது 'ஐயோ! கெட்டேன் கெட்டேன்!, என் ஜன்ம மென்னாயிற்று!' என்று நொந்துகொண்டே வந்ததாக அருளிச் செய்துள்ளார். ஐயோ! பரம பக்தனை இப்படியொரு நீர்ப் புழுவின் வாயிலே யகப்பட்டுத் துடிக்கவிட்டேனே பாவியேன்! என்று எம்பெருமான் கதறியழுகின்றமையன்றோ 'मां धिक्' (மாம் தீக்) என்கிற விடத்தில் நன்கு விளங்குவது. யானையினிடரைத் தீர்க்க வல்லவனே யெம்பெருமான்; அடுத்த க்ஷணத்திலேயே அவ்விடரைத் தீர்ப்பதும் செய்கிறான். அதிலொரு குறையில்லை. ஆனாலும் இடர் நேர்ந்துவிட்டதே யென்று இடர்படாமலிருக்க முடியுமோ எம்பெருமானாலே? மரங்களுமிரங்கும்

போது பரம சேதநன் இரங்காதிருக்க ஸாத்யமோ? சைதந்ய க்ருத்யமாக நேரு மது தவிர்க்க வொண்ணுதே. குழந்தை கிணற்றில் விழுந்து விட்டதென்றறிந்த தாய் அழுதுகொண்டே ஓடிவருகிருள்; தைவாதீனமாகக் குழந்தை எடுக்கப்பட்டு ஜீவித சந்தேஹமும் நீங்கப் பெற்றது. ஆனாலும் தாயினுடைய துயரம் அன்று முழுவதும் அநுவர்த்தித்தே யிருக்கும். அழுகை ஓயாது. கண்ணீர்ப் பெருக்கு அறாது. காரணம் யாரைக் கேட்பது? யார் சொல்ல வல்லார்? ஆத்ம தர்மம் அகற்ற வொண்ணுதே. கஜேந்த்ராழ்வானுடைய துயர் தீர்ந்த பின்புங் கூட எம்பெருமானுடைய துயர் விரைவில் தீரவில்லையே. தீரமாட்டாதே.

சிஷ்: இவ் விஷயம் சில பாக்ய ஹீநர்களுக்கு ருசிக்க மாட்டாதென்று நினைக்கிறேன். ஏதோ இதெல்லாம் அதிவாதமாகச் சொல்லப்படுகிறதென்றே கொள்வது சிலருக்கு ஜந்ம ஸித்தமாயிருக்கின்றது. கண்ணபிரான் அவதார ஸமாப்தியைச் செய்து தன்னடிச் சோதிக்கு எழுந்தருளச் செய்தேயும் திருவுள்ளத்தில் இழவோடே எழுந்தருளினதாக மஹர்ஷி கூறுகிருர்; "नातिस्वस्थमना ययौ— நாதிஸ்வஸ்தமாநா யயௌ" என்கிற வசனம் ப்ரஸித்தமானது. த்ரௌபதிக்கு மஹா ஸதஸ்ஸில் நேர்ந்த பரிபவத்தைப் பரிஹரித்து துர்யோதநாதிகளையும் நிரஸித்து தர்மபுத்திரன் தலையிலே முடியையும் வைத்து இவள் குழலையும் முடிப்பித்துப் பின்னும் "गोविन्देति यदाक्रन्दत् कृष्णा मां दूरवासिनम्। ऋणं प्रवृद्धमिव मे हृदयान्नापसर्पति— கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம்—ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந் நாபஸர்ப்பதி" என்று குறைவாளனாய் பரமபதத்துக்கெழுந்தருளுகிற போதும் திருவுள்ளத்தில் புண்ணோடே யெழுந்தருளினான் என்று மஹரிஷிகள் தாமே கூறியிருக்க, கல் நெஞ்சும் கரையா நிற்க, இந்த மஹா குணத்தை உள்ளுருகி அநுபவிக்க ப்ராப்தமாயிருக்க அதற்கு பாக்யமில்லாததோடு இக் குணத்தை இல்லை செய்யவும் தீக்ஷிதர்களாய் ஆக்ஷேபங்களை வளர்த்துகிருர்களே......!

ஆசார்: உன்னுடைய ஸந்தேஹங்களெல்லாம் தீர்ந்து விட்டனவா என்ன? இன்று உன்னோடு வெகுநாழிகை போது போக்க ப்ராப்தமாகு மென்றிருந்தேனே; ஸகல ஸந்தேகங்களும் தீரப்பெற்றவன் போல தத்வம் பேச ஆரம்பித்து விட்டாயே.

சிஷ்: இல்லை யில்லை; அடியேன் பகவத்குணங்களில் நெஞ்சு உருகுபவன். ப்ரக்ருத விஷயமான ஸித்தாந்தத்தில் அடியேனுக்கு விப்ரதிபத்தி லேசமும் கிடையாது. அடியேனநுபவிக்கிற பகவத்குணங்களில் தயையும் வாத்ஸல்யமுமே தலை நிற்பவை. "ஆவாவென்று அடியேற்கு இறை யிரங்காய்" என்றும் "ஆவாவென்று தொண்டர்க்குத் தானருளி" என்றும் ஆழ்வார்களருளிய ஈரச் சொற்கள் என்னுள்ளத்துள்ளே ஊறிக் கிடக்கின்றன. ஆவா வென்று என்றது ஹா ஹா என்று என்றபடி. துக்க முடையவனுக்கே ஹா ஹா காரமுண்டாகும். அந்த ஹா ஹா காரம் எம்பெருமானுக்குள்ளதாக நிர்விவாத ஸித்தம். ஆகவே ஸித்தாந்தத்தில் அடியேன் உறுதியுடையவனே. அந்த உறுதியினுல் இடை யிடையே அடியேன் தெளிந்து பேசும் பேச்சுக்கள் அநிவார்யங்கள். பிறர் செய்யும் ஆக்ஷேபங்களுக்குத் தினவடங்க ஸமாதானம் சொல்லவேண்டி யிருப்பதனுல் அதற்கா

கவே தேவரீரிடம் சில கேள்விகள் கேட்க எழுந்தேன். கேட்கிறேன், திருவுள்ளம் பற்ற வேணும். ஆநந்த மயனாக ஓதப்பட்ட எம்பெருமானுக்கும் துக்க முண்டென்று எப்படி இசைய முடியுமென்று கேட்கிறீர்கள். இதற்கு த்ருப்தி கரமாக அருளிச் செய்யவேணும்.

**ஆசார்:** எம்பெருமான் நிரங்குச ஸ்வதந்திரனென்று நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றானன்றோ; அப்படிப் பட்ட பெருமானை ஆச்ரித பரதந்த்ரனென்று எங்ஙனம் இசைகின்றீர்கள் என்று கேளாய். அதையும் நாங்கள் இசைகின்றோம் என்றே அவர்கள் விடை கூறுவர்கள்; அப்போது விரோத பரிஹார மென்கிற ரஹஸ்யத்தில் தேசிகர் வெகு அழகாக அருளிச் செய்துள்ள இந்த ஸ்ரீ ஸூக்திகளை யெடுத்துரை ;—

"ஸ்வதந்த்ரனான ராஜா அநுகூலரான மந்த்ரிகளுக்காதல், வல்லபையான மஹிஷிக் காதல் பாலரான புத்திரர்களுக் காதல் தன் இச்சையாலே சொல்லிற்றுச் செய்யுங் கட்டளையிலே ஈச்வரனும் ஸர்வ சக்தியாய் நிரபேக்ஷனாயிருந்து வைத்து **அழைத்த விடங்களில்** வந்தும் அபேக்ஷித்தவற்றைச் செய்யவும் இடைச்சிகளுள்ளிட்டார் கட்டவு மடிக்கவு மிசைந்தும் இப்படி நடக்கிற கட்டளையெல்லாம் .... தன் ஸ்வாதந்த்ர்ய காஷ்டையான படியாலே இந்த பாரதந்த்ர்யம் விருத்தமன்று" இத்யாதிகள்.

**சிஷ்:** நிரங்குச ஸ்வதந்த்ரனுக்குண்டான ஆச்ரித பாரதந்த்ர்ய மானது அந்த ஸ்வாதந்த்ர்யத்தின் பரமகாஷ்டை யென்று தேறுகிறது. அதாவது, ஸ்வதந்திரன் எப்படி யிருந்தாலும் எது செய்தாலும் கேட்க முடியாதாகையாலே அத்தகைய கேட்பாரற்ற ஸ்வாதந்த்ரியத்தினால் அடியார்க்கு விதேயனாகவும் தன்னை யமைத்துக் கொள்ளுகிறானென்றதாகிறது. இது பொருத்தமானதே. இது ப்ரக்ருத விஷயத்திற்கு எங்ஙனம் ஸமாதானமாகும்? ஆச்ரித பாரதந்த்ர்யமும் ஸ்வாதந்த்ரியத்தின் ஒருவகையே யென்று கொள்வதுபோல, து:க்கசாலித்வமும் ஆநந்த மயத்வத்தினுடைய ஒருவகையே யென்று சொல்லியாக வேண்டுமே. அப்படிச் சொல்லமுடியுமோ?

**ஆசார்:** கேளாய்; ஆநந்தமயத்வ மென்பதும் கல்யாணகுணசாலித்வ மென்பதும் பர்யாயம். கல்யாண குணசாலித்வத்திற்கு எதிர்த்தட்டானது ஹேய ஸம்பந்தம். அந்த ஹேய ஸம்பந்தம் இசையப் பட்டால்தான் ஆநந்தமயத்வம் பாதிக்கப்பட்டதாகும். எம்பெருமானுக்கு இசையப்படுகிற துக்கம் ஹேய ஸம்பந்த ரூபமன்று. கல்யாண குணங்களிற் சிறந்தது. "**பஹவோ ந்ருப! கல்யாணகுணா: புத்ரஸ்ய ஸந்தி தே**" என்று [ஸ்ரீ ராமாயணத்தில்] கல்யாண குணங்களென்ற மகுடத்தின் கீழே ***வ்யஸநேஷு* மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:க்கித:*** என்று சொல்லியிருக்கையாலே இந்த து:க்கம் ஹேயமென்று வாய் திறக்க இடமே யில்லை. ஆகவே, கல்யாண குணசாலித்வ பர்யாயமான ஆநந்தமயத்வத்தோடு கல்யாண குணாத்மகமான இந்த து:க்கிதத்வம் விருத்தமன்று என்று தேறிற்று.

**சிஷ்:** ஸ்வாமிந்! இது மிகவும் த்ருப்திகரமும் ஸமஞ்ஜஸமுமான ஸமாதானம். இவ்விஷயத்தைப் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளினாலும் நிலைநாட்டி விட்டால் ஆணியடித்தாப் போலிருக்கும். ஸ்வாமி எது ஸாதித்தாலும் பூர்வாசார்ய

ஸ்ரீஸூக்தி ஸித்தமே அத்தனையும் என்கிற ப்ரதிபத்தியில் அடியேனுக்குக் குறை யில்லை. பிறருடைய வாய் அடங்கவேண்டுவது ப்ரதானம். இங்குப் பிறருடைய ஸித்தாந்த வாதம்— "துக்கம் எவ்விதத்திலும் ஹேயமேயாகும்; அபுருஷார்த்தமே யான இது அகிலஹேய ப்ரத்யநீகன் பக்கலிலே ஸம்பவிக்கவே மாட்டாது; பர துக்க ப்ரயுக்தமான துக்கம் ஹேயமன்று என்றால் அப்போது துக்கமென்கிற சொல்லை யிட்டு வழங்கவே கூடாது. துக்கமென்றால் அது ஹேயமாக வல்லது வேறுவிதமாக இருக்க முடியாதே. துக்கமாயும் அஹேயமாயு மிருக்கின்றதென்னும் 'நெருப்பாயும் குளிர்ந்ததாயுமிருக்கிறது' என்பது போல் வ்யாஹத பாஷணமேயாகும்" என்றிப்படி சொல்லியும் எழுதியும் கோஷிக்கின்றவர்களுக்கு அடியேன் ஸமஞ்ஜஸமான விடை கொடுத்தே வருகிறேன். திருவடிவாரத்தில் ஸங்க்ரஹமாக விஜ்ஞாபிக்கிறேன். 'துக்கம் எந்தவிதத்திலும் தோஷமே' என்கிறவர்கள் ஆனந்தம் எந்தவிதத்திலும் குணமேயென்று கொண்டவர்களாக வேண்டும்; ஒருவன் பகவதபசாரப்பட்டும் பாகவதாபசாரப்பட்டும் ஆனந்தித்தானாகில் அவ்வானந்தமும் குணமேயோ? அஸுர ராக்ஷஸர்கள் பரஹிம்ஸை புரிந்து அபரிமிதமான ஆனந்தமடைந்தால் அவ்வானந்தம் ஹேயமன்று, குணமேதான் என்று அறிஞர் கூறுவர்களோ? உண்மையில் குணத்வ தோஷத்வங்கள் பிறர் நினைக்கிறபடியில்லை. உபாதி பேதத்தாலே தோஷமே குணமாகவும் குணமே தோஷமாகவும் கொள்ளப்படுகிற முறை எங்குமுள்ளது. ஈர நெஞ்சினர் இளநெஞ்சினர் என்று புகழப்படுகிற தயாளுக்களுக்குப் பிறர் நோவு காரணமாகத் தோன்றும் இரக்கம் பரம குணமேயல்லது தோஷமன்று. ப்ரத்யுத இந்த இரக்க முண்டாகாமையே பெரிய தோஷமாகும். இது மநுஷ்யர்களுக்கும் பகவானுக்கு மொக்கும். மநுஷ்யர்களுக்கு இது குணமானாலும் பகவானுக்கு மஹா தோஷமேயாகுமென்று பிறர் கூறுவதும் எழுதுவதும் *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:கித:* இத்யாதி ப்ரமாணங்கள் நடையாடாத நாட்டிலே நிகழத் தகும்.'

ஆசா: பிள்ளாய்! இவை உன்னுடைய புதிய வார்த்தைகளல்ல. எல்லாம் நம் பெரியார்களுடைய திவ்ய க்ரந்தங்களிலுள்ளவையே. ஸகல ப்ரமாணங்களையும் நீ கண்ணாடி போல் கண்டு வைத்து நல்ல தெளிவு பெற்றிருக்கிறாயே. என்னிடம் நீ அபூர்வமாகத் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயம் ஒன்றும் காணேனே.

சிஷ்: அப்படி ஸாதிக்கக் கூடாது. ஸஹஸ்ரநாமத்தில் *கரணம் காரணம் கர்த்தா விகர்த்தா கஹநோ குஹ:* என்ற விடத்தில் பட்டருடைய பாஷ்யத்திலுள்ள சில ஸ்ரீ ஸூக்திகளுக்குப் பிறர் ஏதோ வேறு பொருள் எழுதி வெளியிட்டிருப்பதைக் கண்டேன். அவ்விஷயத்தில் தேவரீர் நினைவடங்கச் சொல்லவேணும். **கர்த்தா விகர்த்தா கஹந:** என்ற மூன்று திருநாமங்களினுடையவும் பாஷ்யத்திலுள்ள ஸ்ரீஸூக்திகளின்மேல் அவருடைய திருவுள்ளம் இன்னதென்று ஸுஸ்பஷ்டமாக நிர்ணயித்தருளிச் செய்யவேணும். இதைப்பற்றின விசாரத்திற்காகவே இன்று அடியேன் முக்கியமாக ஸ்வாமியிடம் விடை கொண்டது. **விகர்த்தா** என்கிற திருநாமத்தின் பாஷ்யத்தில் "स्वार्थहर्षशोकाद्यभावेऽपि परार्थतत्प्रसक्तिरदोषः ; अन्यथा परदुःखदुःखित्वादयो गुणाः कथमस्य स्युः ?—ஸ்வார்த்த ஹர்ஷ சோகாத்யபாவேபி பரார்த்த

தத்ப்ரஸக்தி: அதோஷ:; அந்யதா பரது:க்க து:க்கித்வாதயோ குணா: கதமஸ்ய ஸ்யு:?" என்றுள்ள ஸ்ரீஸூக்திகளை மாத்திரம் சிலர்கள் கண்டு மருண்டு பேசுகிருர்களென்றும் அந்த பிரகரணத்தில் முன்னும் பின்னுமுள்ள ஸ்ரீஸூக்திகளையும் சேர்த்து ஆராய்ந்து பார்த்தால் உண்மைப் பொருள் விளங்குமென்றும் பிறர் கூறுகிருர்கள். அவற்றையெல்லாம் தேவரீர் நன்கு ஆராய்ந்து பார்த்திருக்குமே. விசதமாக விவரித்தருளவேணும்.

ஆசா: அந்த பாஷ்ய ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு பிறர் முடிவு செய்தது என்ன? என்பதைத் தெரிந்து கொண்டிருக்கிருயல்லவோ? அந்த முடிவையும் அதன்மேல் உனக்குத் தோன்றினவற்றையும் சொல்லிக் காணும். பிறகு நான் சொல்லுகிறேன்.

சிஷ்: அப்படியே அடியேன் விஜ்ஞாபிக்கிறேன். பகவானுக்குப் பரது:க்க து:க்கித்வமுள்ளதாக பட்டர் ஸாதித்திருப்பது உண்மையே. ஆனால் பிறர் படும் துக்கத்தைக் கண்டு உண்டாகும் துக்கமுடையவன் எம்பெருமான்— என்று சொன்னபடியன்று. ஏனென்றால் பட்டர் அங்கு முதலை பிடித்துச் செய்து வரும் உபாதானம் இப்படிக்கில்லை. அதற்குச் சேர நிஷ்கர்ஷிக்குமளவில் परदुःखेन दुःखित्वं नाम— परदुःखाभिन्नदुःखवत्त्वमेव । धान्येन धनवानितिवत् । என்றே நிஷ்கர்ஷிக்க வேண்டும். அதாவது, பிறர்படும் துக்கம் வேறு, அதைக் கண்டு தனக்குண்டாகும் துக்கம் வேறு என்பது கிடையாது. பரதுக்கத்தையே ஸ்வதுக்கமாகக் கொள்ளுகை என்பது தானுள்ளது. "धान्येन धनवान्— தாந்யேந தநவாந்" என்கிற ப்ரயோகம் இதற்கு நிதர்சநம். அங்கு, தான்யத்தினுலுண்டான தனத்தையுடையவன் என்று பொருளில்லையே. தான்யத்தையே தனமாக வுடையவன் [धान्याभिन्न धनवान्] என்பதே யன்றோ பொருள். அதுபோலவே பரது:க்காபிந்ந து:க்கவாந் என்பதே பொருள்— என்கிருர்கள். இது சிறிதும் ஸமஞ்ஜஸமாகத் தோன்றவில்லை. அடியேனது அற்ப புத்திக்குத் தோன்றினவற்றை விஜ்ஞாபிக்கிறேன், திருச்செவி சாத்தவேணும். தலையைச் சுற்றி மூக்கைப் பிடிப்பது போன்ற இவ்வர்த்த வர்ணநத்தினுல் இவர்களுக்கு யாதொரு லாபமுமில்லையென்பதும் இதுவும் घट्टकुट्यां प्रभातமே யென்பதும் நிற்க. பரது:க்கது:க்கித்வ மென்கிற சொல் பல ஆசார்ய ஸ்ரீஸூக்திகளில் வருகிறது. அங்கெல்லாங்கூட இப்படித்தான் அர்த்தமென்று இவர்கள் இலிச் சொல்லியாக வேண்டும்; ஆனால் சொல்லமுடியாது. தேசிகன் சரணாகதி கத்ய பாஷ்யத்தில் [அகில ஹேயேத்யாதி சூர்ணையில்] காருண்யம் என்பதை விவரிக்குமிடத்து "परदुःखदुःखित्वादिकं तु न लक्षणम्; अव्याप्तेरतिव्याप्तेश्च" [பரது:க்கது:க்கித்வாதிகம் து ந லக்ஷணம், அவ்யாப்தே: அதிவ்யாப்தேச்ச] என்கிற வாக்ய மருளியுள்ளார். இதில் உட்புகுந்து விசாரம் இங்கு வேண்டா; இங்கு உபாத்தமாயிருக்கின்ற பரது:க்கது:க்கித்வ மென்கிற சொல் 'பிறர்படும் துக்கத்தைக் கண்டு துக்கிப்பது' என்கிற பொருளில் பிரயோகிக்கப்பட்டதேயன்றி, பரது:க்காபிந்ந துக்கித்வ மென்கிற பொருளில் பிரயோகிக்கப்பட்டதன்று. இது நிர்விவாதமான விஷயம். அன்றியும் பரது:க்காபிந்ந து:க்கவத்த்வ மென்கிற பொருளில் பரது:க்க து:க்கித்வ மென்கிற ஸமாஸமே தேறமாட்டாது. மிகவும் க்லிஷ்டமான

கதியைச் சொல்லவேண்டி வரும். இதை அபப்ரயோக மென்றுகூடச் சொல்ல வேண்டிவரும். அதுவும் நிற்க, முக்கியமாக வக்தாவின் விவக்ஷையைக் கண்டறிந்து சொற்களுக்குப் பொருள் கூறவேண்டும். இதுவோ பட்டருடைய ஸ்ரீஸூக்தி. அவர் ஸுவ்யக்தமாகக் கூறியிருக்குமிடங்களைத் தழுவியன்றோ பொருள் கூறவேண்டும். இவர்தாம் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தின் முடிவில் "**दयाऽन्येषां दुःखासहनम्**—தயா அந்யேஷாம் துக்காஸஹநம்" என்று ஸுவ்யக்தமாகக் கூறினார். 'பிறர்படும் துக்கத்தைக் கண்டு ஸஹித்திருக்கமாட்டாமையே தயை' என்று இதன் பொருள். ஸஹிஷ்ணுத்வமாவது என்ன? அஸஹிஷ்ணுத்வமாவது என்ன? என்பதை யாவரும் எளிதிலறிவார்கள். "இந்த துக்கத்தைப் பல்லைக் கடித்துக் கொண்டு ஸஹித்திருக்கிறேன்" என்கிறானொருவன். "ஐயோ! இந்த துக்கம் என்னால் ஸஹிக்க முடியவில்லையே!" என்கிறான் மற்றொருவன். இவ்விரண்டிடத்திலும் தாத்பர்யமென்ன? ஸஹிக்கக்கூடிய அளவிலுள்ள துக்கம் ஸாதாரண துக்கமாகும். ஸஹிக்கமுடியாத வெல்லையிலுள்ள துக்கம் அபரிமிதமான துக்கமாகும். [ஸ்தோத்ர ரத்நத்தில் '**ஸர்வம் ஸஹே**' என்றவிடத்தில் "ஸர்வம் துக்கம் அநுபவிஷ்யாமி" என்பது தேசிகபாஷ்யம்] ஏவஞ்ச, 'எம்பெருமான் பரதுக்காஸஹிஷ்ணு' என்றால் பிறர் துக்கப்படும் போது தான் அபரிமிதமாக துக்கப்படுமவன் என்றதாகுமே யல்லது வேறொன்றல்ல.

இவருடைய திருவடி பணிந்த வேதாசார்ய பட்டர் அருளிய க்ஷமாஷோடசியில் "**मत्पापक्षपणाय योजयसि चेत् घोरेण दण्डेन मां रङ्गाधीश्वर! केवलायकरणाद्दुःखं मम स्यान्महत्। तद्द्रष्टुर्भवतोऽपि दुःखमतुलं घोरं दयालो! भवेत् तस्मात्तेऽपि सुखाय मत्कृतमिदं सर्वं त्वया क्षम्यताम्**— மத்பாபக்ஷபணாய யோஜயஸி சேத் கோரேண தண்டேந மாம் ரங்காதீச்வர! கேவலாககரணாத் துக்கம் மம ஸ்யாத் மஹத், தத்த்ரஷ்டுர் பவதோபி து:க்கமதுலம் கோரம் தயாளோ! பவேத் தஸ்மாத் தேபி ஸுகாய மத்க்ருதமிதம் ஸர்வம் த்வயா க்ஷம்யதாம்." என்றுள்ள ச்லோகமும் பிறருடைய கலக்கத்தைப் போக்கி நல்ல தெளிவைத் தரவல்லது. பகவானே! நீ தயாளுவாதலால், நான் துக்கப்படுமளவில் அந்த துக்கத்தைக் கண்டு நீயும் துக்கப்படவேண்டி வருமே யென்று ஸ்பஷ்டமாகக் கூறியுள்ளாரிறே. சேதநவர்க்கங்கள் கரணகளேபரங்களை யிழந்து துக்கிக்குமளவில் எம்பெருமானுடைய திருவுள்ளம் எப்படி யிருந்ததென்பதை யருளிச்செய்யாநின்ற பட்டர் "**अचिदविशेषितान् प्रलयसीमनि संसरतः करणकलेबरैर्घटयितुं दयमानमनाः**— அசிதவிசேஷிதாந் ப்ரளயஸீமநி ஸம்ஸரத: கரணகளேபரைர் கடயிதும் தயமாநமநா:" என்றார். இங்கு **தயமாநமநா:** என்றதற்குப் பொருள் விளங்காமலிருந்தது. அதை நன்கு விளக்கி யருளினவர் தேசிகன். தயாசதகத்தில்— "**अचिद्विशिष्टान् प्रलये जन्तूनवलोक्य जातनिर्वेदा**— அசிதவிசிஷ்டாந் ப்ரளயே ஜந்தூநவலோக்ய ஜாதநிர்வேதா" என்றார். தயாளுவான எம்பெருமான் செய்தருளும் செயல்களையெல்லாம் தயையின்மேல் ஏறிட்டுத் துதிப்பது இந்த ஸ்தோத்திரத்தின் வைகரியாதலால், இந்த ச்லோகத்தில் **வ்ருஷசைலநாத கருணே!** என்று தயையை ஸம்போதித்து '**த்வம் ஜாதநிர்வேதா**' என்று கூறியிருப்பதானது:பகவானையே ஜாதநிர்வேதனாகக் கூறினபடி யல்லது வேறில்லை யென்பது நிர்விவாதம். இங்கு "ஜந்தூந் **அவலோக்ய** ஜாதநிர்வேதா" என்று நிஸ்ஸந்தேஹமாக வுள்ளது. தயநீய தசாபந்

நர்களைக் கண்டு எம்பெருமான் துக்கிப்பதாகச் சொல்லி யிருக்கிறாரே யல்லது தத் து:க்காபிந்ந து:க்கமுள்ளவனாகச் சொன்னாரல்லர். இப்படிப்பட்ட ப்ரமாணங்கள் ஒன்றல்ல, இரண்டல்ல; நூறாயிரக் கணக்கில் கிடைக்கும். எந்த ப்ரமாணமும் மேலெடுத்துக் காட்டிய தயாசதக ஸூக்திக்கு ஈடாகாது. இதைவிட வ்யக்தமாக வேறொரு ப்ரமாணம் கிடைக்கமாட்டாது. பிறர் கூறும் அபார்த்தத்தை அகற்ற இஃதொன்றே போதும். பரது:க்க து:க்கித்வ மென்கிற பதத்தை ப்ரயோகித்தருளின பட்டர்க்கு பிறர்படும் துக்கத்தைக் கண்டு துக்கித்தலென்கிற பொருள் தவிர வேறெதுவும் விவக்ஷிதமன்று என்பதை விவேகிகள் திண்ணமாகக் கொள்ளலாம்.

அக்லிஷ்டமான இப் பொருளில் என்ன அநுபபத்தி யுள்ளதாக எண்ணி வேறொரு பொருளைக் கற்பிக்கிறார்களென்று விமர்சிக்கவேணும். அகில ஹேய ப்ரத்யநீகனுக்கு ஹேயமான துக்கம் கூடாது என்கிற இவ்வொரு காரணமே யாகும். துக்கமென்றால் அது ஹேயமாகத் தானிருக்கும்; குணமாகக் கூடிய துக்கம் இருக்கவே மாட்டாது என்கிற மருள் பிறரிடம் மலிந்து கிடக்கிறது. அவர்கள் இந்த ஸஹஸ்ரநாமத்திலேயே **அவிஜ்ஞாதா** என்கிற திருநாமத்தையும் உற்று நோக்கவேணும். [*अविज्ञाता सहस्रांशुर्विधाता कृतलक्षण इत्यादि।] **அவிஜ்ஞாதா** என்பதற்கு அறிவில்லாதவன் என்று பொருள். ஸர்வஜ்ஞனை பகவானை அறிவில்லாதவனென்று எப்படி சொல்லலாம்? இங்கு சங்கரபாஷ்யம் அவருடைய மதப்படி யுள்ளது. பகவான் ஜ்ஞாநஸ்வரூபி யாதலால் **ஜ்ஞாதா** அல்லர் என்று அவர் எளிதாக எழுதி முடித்திட்டார். இங்கு பட்டருடைய பாஷ்யமோ வென்னில், அடியார்களுடைய குற்றங்களை அறியாதவராதலால் அதுகாரணமாக **அவிஜ்ஞாதா** என்னத்தகும் என்று ஸாதித்துவிட்டு உடனே, எதையும் அறியக் கடமைப்பட்டவரான 'பகவானுக்குச் சில விஷயங்கள் தெரியாதென்றால் கொத்தைவாராதோ? ஸர்வஜ்ஞனுக்கு அஜ்ஞத்வமென்பது ஹேயமல்லவோ என்று சங்கித்துக் கொண்டு, பக்தர்கள் விஷயத்தில் குற்றங்களை யுணராமை மஹாகுணமே யல்லது ஹேயமன்று என்றும் ஸாதித்துள்ளார். "सर्वज्ञतामेव मुपालभामहे त्वं ह्यज्ञ एवाश्रितदोषजोषणः— ஸர்வஜ்ஞதாமேவ முபாலபாமஹே த்வம் ஹி அஜ்ஞ ஏவ ஆச்ரிததோஷஜோஷண:" என்று தமது திருத்தகப்பனார் [கூரத்தாழ்வான்] அருளிச் செய்திருப்பதாகவும் ஸம்வாதம் காட்டியருளினர். இங்கு இவ்விதமாக அருளிச் செய்திருக்கின்ற பட்டர் தாமே '**விகர்த்தா**' என்னும் திருநாமத்தின் பாஷ்யமு மருளிச் செய்தவரென்பதை மறக்கலாகாது. 'ஸர்வஜ்ஞனுக்கு அஜ்ஞத்வம் தோஷமன்று, குணந்தான்' என்று இங்கு ஸாதித்தது போலவே 'ஆநந்தமயனுக்குப் பரது:க்க து:கித்வம் தோஷமன்று, குணந்தான்' என்று அங்கு ஸாதித்தார். இதற்கு அபார்த்தம் செய்வது அநுசிதமென்பது இதனாலும் திடமாகும்.

இனி, परदुःखाभिन्नदुःखवत्त्वम् [பரது:க்காபிந்ந து:க்கவத்த்வம்] என்றால் என்ன அர்த்தம்? என்றும் சிறிது விசாரிப்போம். ஸர்வேச்வரன் தவிர மற்றுள்ள சேதநராசிகள் யாவும் பரசப்தார்த்தமாகக் கொள்ளப்பட வேண்டும். सर्वचेतनदुःखाभिन्नदुःखवत्त्वम्– ஸர்வசேதந து:க்காபிந்ந து:க்கவத்த்வம்] என்று முடிந்தது.

கிஞ் சேதநர்களோ எண்ணிறந்தவர்கள். ஏககாலத்தில் அநேக சேதநராசிகள் ஆநந்தப்பட்டுக் கொண்டிருப்பதும் அநேக சேதந ராசிகள் துக்கப்பட்டுக் கொண்டிருப்பதும் நிர்விவாதம். ஆனந்தப்படுகையைப் பற்றி இங்கு விசாரமில்லாமையால் அது கிடக்கட்டும். ஸர்வகாலாவச்சேதேந பரர்கள் துக்கப்பட்டுக்கொண்டேயிருக்கிறார்களென்று இசைந்து தீரவேணும். [பரர்கள் அஸங்க்யாதர்களாதலாலும் சிலர் துக்கம் தீர்ந்தாலுங்கூட சிலர் துக்கித்துக் கொண்டே யிருப்பதாலும்] ஏவஞ்ச, பகவானுக்குச் சொல்லப்படுகிற பரது:க்காபிஜ்ஞ து:க்கவத்த்வமானது ஒரு க்ஷணங்கூட ஓயாதபடி ஸர்வகாலத்திலும் அநுஸ்யூதமென்று தேறிற்று. இதை ஒரு குணமாக விவேகிகள் கொள்ளுவார்களோ? மறுபடியும் விஜ்ஞாபிக்கிறேன்; ஸர்வ க்ஷணாவச்சேதேந துக்கிகளும் ஆநந்திகளுமான பலகோடி நூறாயிரம் ஜீவராசிகளுண்டென்பதை யாரும் மறுக்கமுடியாதாகையால் பகவத் ஸ்வரூபமானது ஸர்வக்ஷணாவச்சிந்ந துக்கசாலியாகவும் ஸர்வக்ஷணாவச்சிந்ந ஆநந்தசாலியாகவுமுள்ளதென்று பிறர் இசைந்து தீரவேண்டும். ஸர்வக்ஷணாவச்சிந்ந ஆநந்தசாலித்வத்தில் விவாதமில்லையாயினும் மற்றொன்றில் ஸகல வேதாந்திகளுக்கும் விவாதமுண்டே. பகவத்ஸ்வரூபத்தில் யுகபத் அபரிமிதமான துக்கமும் அபரிமிதமான ஆநந்தமும் உள்ளதென்றும் அது தானும் அநுஸ்யூதமாக வுள்ளதென்றும் சொல்லுகிறவர்களின் கருத்து என்னே?

வேதார்த்த ஸங்க்ரஹத்தில் யாதவப்ரகாச மத நிராகரணத்தில்— "देवदत्तस्य एकस्मिन् हस्ते चन्दनपङ्कानुलेपः केयूरकटकाङ्गुलीयकालङ्कारः, एतस्यैवान्यस्मिन् हस्ते मुद्गराभिघातः कालानलज्वालानुप्रवेशश्च, तद्वदेव ईश्वरस्य स्यादिति ब्रह्माज्ञानपक्षादपि पापीयानयं भेदाभेदपक्षः। अपरिमितदुःखस्य पारमार्थिकत्वात् संसारिणामनन्तत्वेन दुस्तरत्वाच्च ॥" என்றருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகளுக்கு இவர்களும் இலக்கே யென்று கூறத் தட்டில்லை. ஆகவே பர து:க்காபிஜ்ஞ து:க்கவத்த்வமென்பது ஸர்வாத்மநா அஸமஞ்ஜஸமான வார்த்தை.

परदुःखदर्शनजनितदुःखवत्त्वम् [பரது:க்க தர்சந ஜநித து:க்கவத்த்வம்] என்று சொன்னமாத்திரம் இந்த ஆபத்தி வாராதோ? பகவான் ஏககாலத்தில் ஸர்வ ஸாக்ஷாத்கார ஸமர்த்தனாகையாலே, துக்கப்படுகின்ற அநந்த ஜீவராசிகளையும் ஆனந்தப்படுகின்ற அநந்த ஜீவராசிகளையும் யுகபத் ஸர்வதா ஸாக்ஷாத்கரித்து ஸர்வக்ஷணாவச்சிந்ந துக்கசாலியாகவும் ஸர்வக்ஷணாவச்சிந்ந ஆநந்தசாலியாகவும் ஆகவேண்டி வாராதோ வென்னில்; வாராது. ஏனென்னில்; விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திலுள்ள திருநாமங்களில் பரவாஸுதேவ விஷயமானவை சில, வ்யூஹமூர்த்தி விஷயமானவை சில, அந்தர்யாமி விஷயமானவை சில, அர்ச்சாவதார விஷயமானவை சில, ராமக்ருஷ்ணாதி விபவமூர்த்தி விஷயமானவை சில; ஸர்வ விஷயமானவை சில... என்றிங்ஙனே கொள்ளுமாறு பட்டருடைய பாஷ்யம் அவதரித்திருக்கின்றது. ப்ரக்ருதம் விகர்த்தா என்கிற திருநாமத்தை விபவாவதார விஷயமாக வியாக்கியானித்தருளி யுள்ளார். *ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்* என்றும், "நாஹம் தேவோ ந கந்தர்வ:...... அஹம் வோ பாந்தவோ ஜாத:* என்றும் சொல்லிக் கொண்டு அவதரித்தருளின காலங்களில் யுகபத் ஸர்வஸாக்ஷாத்கார சக்தியை ஸங்கல்பவிசேஷத்தாலே ஸங்கோசிப்பித்துக் கொண்டிருக்கையாலே ஆபத்திக்கு

இடமில்லை. விபவாவதாரத்தில் பரர்களான அநந்தகோடி சேதநர்களுடையவும் துக்கங்களை ஏககாலத்தில் காண ப்ரஸக்தி யில்லாமையாலே, துக்கப்பட்டவர்களைக் காணும் போது ஸ்வயம் அதிமாத்ரம் துக்கிப்பதும், ஆனந்திப்பவர்களைக் காணும் போது ஸ்வயம் அதிமாத்ரம் ஆனந்திப்பதும் சொல்லப்பட்டிருப்பதில் ஒருவிதமான அவத்யமுமில்லை. உலகில் மஹாபுருஷர்களிடத்திற் காணும் மஹாகுணமிது.

பட்டர் எடுத்துக் காட்டியுள்ள ப்ரமாணத்தில் "**வ்யஸநேஷு, உத்ஸவேஷு**" என்றுள்ளது. 'வ்யஸநேஷு த்ருஷ்டேஷு, உத்ஸவேஷு த்ருஷ்டேஷு' என்றபடி. இராமன் காணக்கூடிய வ்யஸந ஸம்பவமும் உத்ஸவஸம்பவமும் அஸ்மாத்ருசாமிவ காதாசித்கமேயொழிய ஸார்வகாலிகமன்று. ***संजातबाष्पः परवीरहन्ता रामो मुहूर्तं विमना बभूव***— ஸஞ்ஜாதபாஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ* இத்யாதி ப்ரமாணங்களைக் கொண்டு தேசிகாதி ஸகலாசார்யர்களும் நிரூபித்திருக்கிற மஹாகுணமான து:க்கித்வமானது பரது:க்காஸிஹ்ந து:க்கமென்று சொல்லவொண்ணுமோ? வேறெவ்விதமான கண்ணழிவும் இதற்குச் சொல்லப் போகாதே. சாந்தோக்யோபநிஷத்தில் "**அபஹதபாப்மா விஜரோவிம்ருத்யு: விசோக:**" என்றுள்ளது. **அபஹதபாப்மா**— பாபமில்லாதவன்; **விசோக:**— சோகமில்லாதவன். இங்கு பாஷ்யம் செய்தருளியிருக்கிற ப்ராமாணிகரான ரங்கராமாநுஜ ஸ்வாமிகள் வெகு ஆச்சரியமான நிர்வாஹம் காட்டியுள்ளார். அவசியம் எடுத்துப் பார்க்க வேணும். [உப்பிலியப்பன் ஸ்வாமி பதிப்பு, பக்கம்-284.] **விசோக:** என்றவிடத்தில் சொல்லவேண்டியதையெல்லாம் **அபஹதபாப்மா**விலேயே அவர் அழகாகச் சொல்லிமுடித்தார். அதை அப்படியே அநுவதிக்கிறேன்; **பாப்மா** என்பது ஸுக்ருத துஷ்க்ருதங்களுக்குப் பொதுவான பெயர். பகவான் பாப்மாவைச் செய்யாதவனென்று பொருளல்ல. புண்ய பாப ஸஜாதியங்களான கருமங்களை அவன் செய்யவே செய்கிறான். ஆனால் அவற்றின் பலன் தன்பக்கலில் உண்டாகப் பெறுவதில்லை. செய்த காரியங்களுக்குப் பலன் உண்டாகாமலிருக்குமோ? ஸுக்ருத துஷ்க்ருதங்களானவை தம் தம் பலன்களை உண்டாக்கியே தீருமன்றோ வென்னில்; அந்த நியமம் அஸ்மதாதிகள் விஷயத்திலேயாம். பகவான் தான் பாபம் செய்தாலும் அதற்குள்ள பலப்ரஜநக சக்தியைத் தடுக்கவல்ல ஒரு விலக்ஷண ஸ்வபாவ விசேஷமுடையவன். இங்கு அவருடைய பங்க்தி யிது; "**ईश्वरेण कृतानि पुण्यपापसजातीयानि कर्माणि न शुभाशुभफलजनन शक्तानीत्यर्थः। कृतेऽपि पापे तत्फलजनन शक्तिप्रतिभटत्वलक्षणः कश्चिदीश्वरस्य स्वभावविशेषः अपहतपाप्मत्वम्।**" என்று. இதனால் என்ன சொல்லிற்றாகிறதென்னில்; நாம் பாபம் செய்தால் ஹேயஸம்பந்தம் அவசியம் பெற்றோமாவோம். பகவான் அங்ஙனல்லன். அவனது செயல் ஹேயாபத்திக்கு ஹேதுவாகிறதில்லை. ஏனென்றால், அதுதான் அவனுடைய விலக்ஷண வைபவம். இப்படியே ச்ருதப்ரகாசிகாசார்யரும் அருளிச் செய்திருப்பதாகவும் ரங்கராமாநுஜஸ்வாமி எடுத்துக் காட்டியுள்ளார். அந்தரதிகரண ச்ருதப்ரகாசிகையில் இதை விரிவாகக் காணலாம். **एतेन विशोकशब्दार्थोऽपि सुष्ठु व्याख्यातो भवति भोः।** அவதாரங்களில் சோகமுண்டு. ஆனால் அது ஹேய குணபத்தி ஹேதுவாகிறதில்லை. சோகமானால் ஹேயாபத்தி வந்து தீருமே யென்னில்; அதை வரவொட்டாமல் தடுக்கிற சக்தியுடைமையாகிற ஸ்வபாவ விசேஷம் பகவானுக்குள்ளதாதலால் இப்படிப்பட்ட குணங்களையும் தோஷமாக்கப் பார்க்கவேண்டா வென்றதாயிற்று.

பட்டருடைய பாஷ்யத்தில் பலவிடங்களில் இந்த மஹா குணம் நிரூபிக்கப்படுகிறது. **அநிர்விண்ண:** என்று ஒரு திருநாமம். இது **விகர்த்தா** என்கிற திருநாமத்திற்கு நேரே எதிரானது. ***அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்சு:*** என்று விருத்த தர்ம வைசிஷ்ட்யத்தை [அதாவது அஜ்ஞத்வ ஸர்வஜ்ஞத்வங்களை] ஏகஸ்தலத்திலே சொல்லிற்று; இங்கு அப்படியல்லாமல் வெவ்வேறிடத்திலே சொல்லிற்று என்றிவ்வளவே வாசியுள்ளது. [**விகர்த்தா**— துக்கமுள்ளவன்; **அநிர்விண்ண:**— துக்கமில்லாதவன்.] துக்கமில்லாமையை சங்கராசார்யர் நிர்வஹிக்கிற விதம் வேறு; பட்டர் நிர்வஹிக்கிற விதம் வேறு. துக்கத்தின் அத்யந்தாபாவமுள்ளவன் என்பது சங்கர ஹ்ருதயம். ஆழ்வார்களின் ஈரச் சொற்களிலே ஊறின பட்டர் 'துக்கத்தின் ப்ரத்வம்ஸாபாவமுள்ளவன்' என்கிற திவ்யமான பொருளைக் காட்டுகிறார். திருவாய்மொழியில் ***துயரறு சுடரடி*** என்றவிடத்திற்கு துயரறுக்கும் சுடரடியென்கிற பொருளைத் தள்ளி, 'துயரறும் சுடரடி' [ஸம்ஸாரிகள் துயரற, தான் துயரற்றபடி] என்று பொருளருளிச் செய்த எம்பெருமானாருடைய திருவுள்ளத்திற் கிணங்கவாயிற்று பட்டருளிச் செய்திருப்பது. அதாவது, ஸம்ஸாரப் படுகுழியில் விழுந்து துயருற்றுக் கிடந்தவனை அங்கு நின்று மெடுத்துத் தன் திருவடிகளை யடைவித்து இவ்வகையாலே அவன் துயர் தீரப் பெற்றுமென்றறிந்தவாறே தானும் துயர் தீர்ந்தவன் என்பது இங்கு பட்டர் விவரித்தருளின இன்சுவைப் பொருள். ***कृतकृत्यस्तदा रामो विज्वरः प्रमुमोद ह**— க்ருதக்ருத்யஸ் ததா ராமோ **விஜ்வர:** ப்ரமுமோத ஹ* என்கிற ஸ்ரீராமாயண வசனத்தை இதற்கு ஸம்வாத ப்ரமாணமாகவும் காட்டியருளினர். இதில் **ப்ரமுமோத** என்பதே போதுமாயிருக்க **விஜ்வர:** என்றும் மஹர்ஷி கூறினது ஆழ்ந்து நோக்கத் தக்கது. ***सोऽहं परुषितस्तेन दासवच्चावमानितः**— ஸோஹம் பருஷிதஸ் தேந தாஸவச்சாவமாநித:* என்று விபீஷணாழ்வான் சொல்லக் கேட்ட பெருமாளுடைய திருவுள்ளம் எவ்வளவோ நொந்து கிடந்ததென்றும் அந்த நோவெல்லாம் இப்போது தான் தீரப்பெற்றதென்றும் ஸுஸ்பஷ்டமாக மஹர்ஷி காட்டியுள்ளார். இந்த வசனத்தில் **விஜ்வர:** என்பதே உயிரான சொல். அதற்கு அங்கு என்ன பொருளோ, அதுவேதான் **அநிர்விண்ண:** என்பதற்கும்— என்று பட்டர் தவிர மற்றொருவரால் இது கண்டுபிடிக்கமுடியுமோ? [**விஜ்வர:**— முன்னே ஜ்வரமிருந்து பின்னே அது தீரப்பெற்றவன். **அநிர்விண்ண:**— முன்னே நிர்வேதமிருந்து பின்னே அது தொலையப் பெற்றவன்.] ஸஹஸ்ரநாமத்தில் **அநிர்விண்ண:** என்கிற திருநாமம் இரண்டிடத்தில் வருகிறது. "ஆநந்தமயனாகையாலே எவ்விதத்திலும் நிர்வேதமில்லாதவன்" என்கிற பொருளை ஓரிடத்திலாவது பட்டர் செய்தருளியிருக்கலாம். பகவத் குணதர்ப்பணமென்று திருநாமம் சாத்தப்பெற்ற அந்த திவ்ய க்ரந்தத்தில் அப்பொருள் தலைகாட்டுமோ? அப்போது பகவத் குணங்களுக்குத் தர்ப்பணமன்றோ ஆகும். (1) நிர்வேத கார்யமில்லாதவரென்று ஓரிடத்தில் பொருள் கூறினர்; உலகில் ஒருவன் ஒரு பெரிய கார்யஞ் செய்து அது பலிக்காவிட்டவாறே நிர்வேதமடைந்து வீணான இக்கார்யத்தை இனிமேலும் எதுக்குச் செய்வதென்று வைராக்யமடைந்து ஓய்ந்து நிற்பதுண்டு; இவ்விதமாகவே எம்பெருமானுக்கும் ஜகத் வ்யாபாரத்தில் வைபல்யம் காண நிற்கச் செய்தேயும் நிர்வேதமடைந்து கைவாங்கி யிராதே என்றேனு மொருநாள் ஸபலமாகு மென்று நினைத்து மேன்மேலும் ஜகத் ஸ்ருஷ்டியில் ஒருப்படுமவன் என்று விவரண

முள்ளது. (2) நிர்வேதம் நிரப்பெற்றவனென்று மற்றேரிடத்தில் பொருள் கூறினர். *சோம்பாது இப்பல்லுருவை யெல்லாம் படர்வித்த வித்தா* என்கிற பெரிய திருவந்தாதிப் பாசுரத்தைக் கொண்டு முந்தின பொருள் செய்தார். *நாயநும் சுடரடியென்ற எம்பெருமானர் நிர்வாஹத்தைக் கொண்டும் **ஈஶ்வர:** இத்யாதியைக் கொண்டும் பிந்தின பொருள் பணித்தார். சேதநர்களின் வைமுக்யத்தைக் கண்டு நிர்வேதப்படுவதும் ஆபிமுக்யத்தைக் கண்டு நிர்வேதம் நிரப் பெறுவதுமான விக்ருதிகள் எம்பெருமானுக்கு உள்ளனவென்று நிருபிக்குமிவ்விஷயத்தில் நம் ஆழ்வாராசார்யர்களனைவரும் ஏக கண்டர்கள். இந்த மஹா குணம் எம்பெருமானுக்கு இல்லையாகில் ம்ருத்பிண்டத்தோடு அவனோடு வாசியில்லையாமன்றே.

"**कृपा दयाऽनुकम्पा स्यादनुक्रोशोऽपि**— க்ருபா தயா அநுகம்பா ஸ்யாத் அநுக்ரோசோபி" என்கிற அமரகோசம் அறியாதாரில்லை. தயைக்கு **அநுகம்பை** யென்றும் **அநுக்ரோச** மென்றும் பர்யாய நாமமிட்டார்கள். துக்கத்தினால் நடுங்கினவனைக் கண்டு தானும் நடுங்குகை **அநுகம்பா**; துக்கத்தினால் அழுகிறவனைக் கண்டு தானும் அழுகை **அநுக்ரோசம்**. இவற்றுக்கு இவையல்ல பொருளென்று மறுப்பாரில்லை. சைதந்ய முள்ளவிடத்தே இது இருந்தே தீரும். ஸர்வசக்தித்வம் முதலியவை எத்தனை யிருந்தாலும் அவை இதற்கு ப்ரதிபந்தகங்களாகமாட்டா. "**स एकाकी न रमेत**— ஸ ஏகாகீ நரமேத" என்ற உபநிஷத் வாக்யத்தை உள்ளத்துள்ளே உறைய வைக்கவேணும். ரதியாவது என்ன? அரதியாவது என்ன? எதனாலிங்கு அரதி கூறிற்று? என்று ஆராயவேணுமே. இன்று புதிதாக நாம் ஆராய வேண்டாவே. பரமக்ருபாளுக்களான ஆசார்யர்கள் எடுத்துக் காட்டாததொன்றில்லையே.

இனி ப்ரக்ருத விவாதஸ்தலத்தில் பட்டருடைய பாஷ்ய பங்க்திகளை ஆழ்ந்து ஆராய்ந்து அடியேனுக்குத் தோன்றியவற்றை விஜ்ஞாபிக்கிறேன்; **விகர்த்தா** என்கிற திருநாமத்தின் பாஷ்யத்தில் உதாஹரிக்கவேண்டிய *ஸ்யஜநேஷு மநுஷ்யாணு மித்யாதி ச்லோகத்தை அதற்கு முந்திய **கர்த்தா** என்கிற திருநாமத்தின் பாஷ்யத்திலேயே உதாஹரித்ததும், அந்த ப்ரமாணத்தோடு கூட "**बहु स्यां प्रजायेय**— பஹு ஸ்யாம் ப்ரஜாயேய" என்கிற உபநிஷத் வாக்யத்தையும் கூட்டி உதாஹரித்ததும் எதற்காகவென்று ஆலோசிக்க வேணும். *ஸ்யஜநேஷு மநுஷ்யாணு மென்கிற ப்ரமாணத்தின் அர்த்தம் வேறு, *பஹு ஸ்யாம் ப்ரஜாயேய* என்கிற ப்ரமாணத்தின் அர்த்தம் வேறு. இதற்கும் அதற்கும் என்ன ஸம்பந்தம்? இரண்டையும் கூட்டி ஒருங்கே உதாஹரித்ததற்குத் திருவுள்ள மென்ன? என்பது மிக முக்கியமாக விமர்சிக்கத் தக்கது. விமர்சிக்குமளவில் தேறுவதை விஜ்ஞாபிக்கிறேன். பட்டர் ஒவ்வொரு திருநாமத்திலும் மிகவும் ஆழ்ந்து பாஷ்யம் செய்தருள்பவர். *"**परर्द्धिः परमस्पष्टः तुष्टः पुष्टः शुभेक्षणः**"* [பரர்த்தி: பரமஸ்பஷ்டஸ் துஷ்ட: புஷ்டச் சுபேக்ஷண:] என்கிற திருநாமங்களுக்குப் பிறகு **ராம:** என்கிற திருநாமம் வருகிறது. இப்படி ஐந்தாறு திருநாமங்களுக்கு அப்பாலுள்ளதான ராம நாமத்திலே திருக்கண் செலுத்தி *பரர்த்தி: இத்யாதி திருநாமங்களையும் ராமாவதார பரங்களாகவே கொண்டு பாஷ்யமிட்டருளினர். "**इत उपरि मृतसंजीवनं रामवृत्तान्तः प्रस्तूयते**" என்று ஐந்து திருநாமங்களுக்கு முன்னமே அவதாரிகை யிட்டருளினர். இங்ஙனே பலவிடமுண்டு. இதனால், கீழ்த் திருநாமங்களுக்கும் மேல் திருநாமங்களுக்கும்

ஸாத்யமானவரையில் தொடர்பு அமைத்து பாஷ்யம் செய்வது பட்டருடைய இயல்பு என்பது அறியப்பெறலாகும். [சங்கர பாஷ்ய ப்ரக்ரியை இங்ஙனேயின்றி.] ப்ரக்ருதம் **விகர்த்தா** என்று மேல்வரும் திருநாமத்திற்கும் **கர்த்தா** என்று முன்ன திருநாமத்திற்கும் சாஸ்த்ரீயமான தொடர்பு காட்டி பாஷ்யம் செய்தருளுகிறார். **விகர்த்தா** என்கிற திருநாமத்திற்கு 'விசித்ர ஜகத் ஸ்ருஷ்டியைப் பண்ணினவர்' என்று பொருள் எழுதிய சங்கராசார்யரைப் போலன்றியே 'லோக துக்கங்களையடைந்து விகாரப்படுபவர்' என்று விலக்ஷணமான பொருளை யருளிச் செய்தவராதலால் 'இதற்கு உபபாதகம் **கர்த்தா** என்கிற கீழ்த் திருநாமம்' என்று கொண்டு அதை ஸப்ரமாணமாக விவரிக்கிறார் பட்டர். ***வ்யஸநேஷு* மநுஷ்யாணாமித்யாதி** ஸ்ரீராமாயண ச்லோகத்தில் ***पितेव—பிதேவ*** என்றிருப்பதை உயிராகக் கொண்டார். **கர்த்தா** என்பதற்கு பிதா என்று பொருள்; **पितृत्वादेव विकर्ता**—பிதாவாகையினாலேயே விகாரப்படுகைக்கு ஔசித்யமுண்டு என்று காட்டவேண்டி "**பஹு ஸ்யா**மென்கிற ப்ரமாணத்தைக் காட்டியருளினர். இந்த உபநிஷத் வாக்யமானது காரணப்ரகரணத்திலுள்ளது. காரணத்வத்தையும் பித்ருத்வத்தையும் பர்யாயமாகக் கொண்டவர்கள் நம் ஆசார்யர்கள். ஆனதுபற்றியே நவவித ஸம்பந்தங்களை ப்ரதிபாதிக்கின்ற "பிதா ச ரக்ஷக: சேஷீ" என்னும் ச்லோகத்தில் காரணமென்ன வேண்டிய இடத்தில் **பிதா** என்று ப்ரயோகிக்கப் பட்டது. "**பிதா ச ரக்ஷக:**" என்கிற விது ப்ரணவத்திலுள்ள அகாரத்தின் பொருளை ஸங்க்ரஹிப்பது. அகாரமானது ப்ரக்ருதி சக்தியினால் காரணத்வத்தையும் தாது சக்தியினால் ரக்ஷகத்வத்தையும் தெரிவிக்கின்றதென்று நிரூபித்தருளுகிறார்கள். குடத்தைக் குறித்து குலால தண்ட சக்ராதிகளுக்குள்ள காரணத்வம் போலன்றிக்கே ஜகத்தைக் குறித்து எம்பெருமானுக்குள்ள காரணத்வம் பித்ருத்வ ரூபமென்கிறார்கள். புத்ரன் துக்கிதனுமளவில் பிதாவும் து:க்கிதனாக ப்ராப்தமன்றோ என்று காட்டுவதற்காகவே இங்கு பட்டர் "**பஹு ஸ்யா**மித்யாதி ச்ருதியைச் சேர்த்துக்கொண்டார். அந்த ச்ருதியில் "**பஹு ஸ்யாந்** என்று ப்ரதம புருஷனைச் சொல்லாமல் **ஸ்யாம்** என்று உத்தம புருஷனைச் சொல்லியிருப்பதிலிருந்து ஒரு சிறந்த ரஸம் கண்டார். உலகில் பிதாக்கள் '**அஹம் புத்ரம் ஜநயாமி**' என்பார்களே யன்றி '**அஹம் புத்ர: ஸ்யாம்**' என்னமாட்டார்கள். அவர்களுக்கு ப்ருதகபிமாநித்வ முள்ளது, புத்ரனுடைய சோகத்தில் ஸந்தோஷப் படுமவர்களும், அவனுடைய ஸந்தோஷத்தில் துக்கிப்பவர்களுமான பிதாக்களையும் உலகிற் காணா நின்றோம். தத்வ்யாவ்ருத்தியையும் பட்டர் காட்டியருளுகிறார். அதற்காகவே இங்கு "**तदतिशयेन या तदवस्थाभिमानी हि भगवान्**" என்றுமருளிச் செய்தது. **விகர்த்தா** என்கிற திருநாமத்தின் பாஷ்யத்தின் அவதாரிகையிலுள்ள "**அத ஏவ**" என்றதற்கு—'பகவான் லோக விலக்ஷண பிதாவாகையினாலேதான்' என்று பொருள். *தஞ்சமாகிய தந்தை தாயொடு என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின் ஈட்டிலருளிச் செய்த இன்சுவைப் பொருள்களெல்லாம் இங்கு அநுஸந்தேயம்.

**ஆசார்:** என் புத்திக்கும் எட்டாத பல விஷயங்களை நீ நன்கு க்ரஹித்து உபபாதனம் செய்தது பரம த்ருப்திகரம். இதற்குமேல் நான் சொல்லக்கூடியது ஒன்றுமில்லையே.

சிஷ்: அடியேனுரைத்தவையே த்ருப்திகரமென்றில் ஸந்தோஷமே. வேறு சில சிறு ஸந்தேஹங்கள் தோன்றியுள்ளன. விஜ்ஞாபிக்கிறேன். "**भवान् सर्वत्र त्वगणितमहामङ्गलगुणः**— பவாந் ஸர்வத்ரைவ து அகணித மஹாமங்கலகுண:" என்று எம்பெருமான் பரவ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சை என்னும் எல்லா நிலைமைகளிலுமே ஸகல கல்யாணகுண ஸம்ருத்தன் என்றிருக்க, இந்த தயாகுணத்தை நம் ஆசார்யர்கள் விபவாவதார மாத்ர விச்ராந்தம் போல் அருளிச் செய்வது எது கொண்டு? (2) அசக்தனுக்குத் தான் பரதுக்கித்வமிருக்கும். ஸர்வசக்தனுக்கு அது உண்டாக ப்ரஸக்தியே யில்லையென்பாருடைய வாதத்திற்கு விடையிறுக்கும்போது தேவரீர் ஸாதித்த விஷயமென்னவென்றால், ஸர்வசக்தனான எம்பெருமானும் அசக்தனைப் போல் பாவனை கொண்டு அவதரித்தபடியால் அந்த அசக்திக்கு இது கூடுமென்று சிலர் லேசாகச் சொல்லிவிடுவர்கள்; இதுவன்று இங்குச் சொல்லத் தக்கது...... என்று ஸாதித்திருக்கிறது. இந்த குணத்தை விபவாவதாரத்திலேயே நிரூபித்தால் "சிலர் லேசாகச் சொல்லிவிடுவர்கள்" என்றவது தானே தேறுகிறது. (3) ஆநந்த மயத்வமும் கல்யாணகுணசாலித்வமும் பர்யாயமென்று தேவரீர் அருளிச் செய்தது; கோசங்களில் பர்யாயமாகப் படிக்கப் பட்டிருக்கும் நாமங்கள் போல் இவை பர்யாயமாகுமோ? என்று சங்கையுண்டானால் ஸப்ரமாணமாக விடை கூறவேணுமே. இம்மூன்று ஸந்தேஹங்களும் தீருமாறு அருளிச் செய்யவேணும்.

ஆசா: இந்த ஸந்தேஹங்கள் யுக்தமானவையே. தெளியச் சொல்லுகேன் கேளாய். "**परो वा व्यूहो वा विभव उत वाऽर्चावतरणो भवन् वाऽन्तर्यामी वरवरद! यो यो भवसि वै। स स त्वं स ऐशान् वरगुणगणान् बिभ्रदखिलान्**" என்று ஆழ்வான் மிகத் தெளிவாக அருளிச் செய்திருக்கையாலே பரத்வாதி பஞ்சகத்திலும் ஸகலகுண ஸம்ருத்திக்கு யாதொரு குறையும் சொல்ல முடியாதுதான். ஆனால், பட்டர் "குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்" என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் அருளிச் செய்துள்ளார்; தன்னிடத்துள்ள குணங்களை வெளியிடுதற்காகவே அவதாரங்கள் ஏற்பட்டனவென்று அருளிச் செய்தபடி. உண்மையில், குணவிசேஷங்களை நாம் விபவாவதாரங்களில் தான் ஆசை தீர அநுபவிக்க முடிகிறது. ஸ்ரீராமாயணம் தொடங்கும்போதே வால்மீகி நாரத ஸம்வாத அமைப்பு உள்ளது. "**को न्वस्मिन् सांप्रतं लोके गुणवान् कश्च वीर्यवान्**" என்று தொடங்கிப் பதினாறு குணங்களை யெடுத்துக் கூறி இந்த குணங்களையுடையவன் யாவன்? என்று வால்மீகி கேட்பது; அதற்கு நாரதர் "**बहवो दुर्लभाश्चैव ये त्वया कीर्तिता गुणाः। मुने वक्ष्याम्यहं बुद्ध्वा तैर्युक्तः श्रूयतां नरः**" என்று அப்படிப்பட்ட குணசாலியைச் சொல்லுகேன் கேளாயென்று விடையிறுப்பது. குணாவிஷ்காரத்திற்காகவே அவதார மமைந்ததென்று விளக்குவதற்காகவேயன்றோ இந்த ஸம்வாதம் இந்த வகையில் அமைந்துள்ளது.

இது கொண்டே பட்டர் "குண பரீவாஹாத்மநாம் ஜந்மநாம்" என்றருளிச் செய்தது. ராவண கம்ஸ சிசுபாலாதிகளை வதம் செய்வதற்காகவே அவதாரங்கள் அமைந்தனவென்று பலர் நினைத்திருப்பார்கள்; ஸங்கல்பமாத்ர ஸாத்யமான அதற்காக பகவான் பயணமெடுத்து வரவேண்டிய அவசியமே யில்லையென்றும், அதுவொரு வ்யாஜமாத்ரமே; உள்ளே அமுங்கிக் கிடக்கிற திருக்குணங்களை ஸாதி

நூக்கவிடத்திலே பிரகாசிப்பித்தற்காகவே அவதாரமென்றும் ஸகலாசார்யர்களும் ஒருமிடறாக அருளிச் செய்வது. இதனை ஸ்வாமி எம்பெருமானாரும் *अन्तस्तद्धर्मोपदेशात्* என்ற ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் ப்ராஸங்கிகமாக அருளிச் செய்துள்ளார். ஆகவே, குணப்ரகாசநத்திற்கென்றே ஏகாந்திகமாக அமைந்த அவதாரங்களில் குண நிரூபணம் எளிது என்பது நம் ஆசார்யர்களின் கருத்து. *व्यवस्था या चैषा ननु वरद! साऽऽविष्कृतिवशात्* என்று ஆழ்வான் அருளிச் செய்த கட்டளையில் ஆவிஷ்காரம் காணுமிடத்திலே ஸமந்வயம் ஸுகரமன்றோ. நம் ஆசார்யர்கள் ஸ்ரீஸூக்தி முகேந குணாநுபவம் பண்ணிற்றெல்லாம் விபவம் அர்ச்சை என்ற இரண்டு நிலைமைகளில் மாத்திரமேயாம். ஸ்ரீவைகுண்ட கத்ய, ஸ்ரீவைகுண்டஸ்தவாதிகளில் பரமபதாநுபவம் பண்ணியிருப்பது அந்த தேச விசேஷத்தில் நிலைமைகளைப் பரக்க வருணித்திருப்பதும் பரமபத நாதனுடைய வடிவழகை யநுபவித்திருப்பதுமே. எம்பெருமானுடைய திவ்ய தேஹ குணங்களையும் திவ்யாத்ம குணங்களையும் கொள்ளை கொள்ளையாக அநுபவிப்பது விபவ அர்ச்சைகளிலேயே. அர்ச்சாவதாரத்தில் நம் போல்வாருடைய பாழுங் கண்ணுக்கு ஒன்றும் புலப்படாதாயினும் "भवद्वपो भास्येवम्" என்ற ஆழ்வானருளிச் செய்த கட்டளையில் பரம பக்தர்களுக்கு அங்குள்ள திருக்குணங்களெல்லாம் கையிலங்கு கனியாகக் காணலாகின்றன.

இனி உன்னுடைய இரண்டாவது ஸந்தேஹத்திற்குப் பரிஹாரம் கேளாய். ஸர்வசக்தனான எம்பெருமானும் அசக்தனைப் போல் பாவனை காட்டிச் செய்த ராமக்ருஷ்ணாதி யவதாரங்களில் இரண்டு வகையான துக்காநுபவங்கள் ஸ்ரீராமாயணாதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றன. (1) ஸ்வார்த்த துக்காநுபவம். (2) பரார்த்த துக்காநுபவம். பிராட்டியைப் பிரிந்த காலத்தில் வாசாமகோசரமாகப் பரிதபித்ததை கூறப்பட்டிருப்பதெல்லாம் உலகமறியும். அது ஸ்வார்த்த துக்காநுபவ கோடியிற் சேர்ந்தது. *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி துக்கித:* என்று ஸாமாந்யமாகவும் *ஸஞ்ஜாதபாஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ* என்று விசேஷமாகவும் சொல்லப்பட்ட துக்காநுபவமானது பரார்த்த துக்காநுபவ கோடியில் சேர்ந்தது. இவ்விரண்டும் துக்காநுபவரூபமாயிருக்கச் செய்தேயும், தமக்கொரு கஷ்டம் நேர்ந்துவிட்டதென்று துக்கிப்பது மாத்திரமே அசக்தி பாவனையினால் செய்த அபிநயரூபம். அதை குணமாக யாரும் எடுத்துக் காட்டுவதில்லை. *வ்யஸநேஷு மநுஷ்யாணா*மித்யாதி ஸித்தமான துக்கமானது அசக்தி பாவனையினாலன்று, அபிநய ரூபமுமன்று. ஆகவேதான் இதைச் சிறந்த குணமாக எடுத்துக் காட்டுகிறார்கள். இது உன் மனத்தில் நன்கு பதியுமாறு தகுந்த ப்ரமாணத்துடனும் நிரூபிக்கிறேன் கேளாய். தேசிகனருளிச் செய்த அதிகரண ஸாராவளியில் * அந்தரதிகரணத்தின் முடிவு ச்லோகத்தில் "यत्तु स्वेच्छावतारेष्वभिनयति तदप्यासुरोपप्लवार्थम्— யத் து ஸ்வேச்சாவதாரேஷ்வபிநயதி ததபி ஆஸுரோபப்லவார்த்தம்" என்றவிடத்திற்கு வியாக்கியானம் எழுதியுள்ள ஸ்ரீமத் அஹோபிலம் ஸ்வாமி ['பதயோஜனா' என்னும் வியாக்கியானத்தில் 108-ஆம் பக்கத்தில்] "स्वेच्छाकृतेषु रामकृष्णाद्यवतारेषु * राज्याद्भ्रंशो वने वासो नष्टा सीता हतो द्विजः। ईदृशीयं ममालक्ष्मीः निर्दहेदपि पावकम्॥* इत्यादिरीत्या दुःखमभिनयतीति यत् तथा दुःखनटनमपि" என்று பணித்துள்ளார்.

இங்கு *ராஜ்யாத் ப்ரம்ச:* இத்யாதியான ஆரண்ய காண்ட ச்லோகத்தை துக்காபிநயத்திற்கு ப்ரமாணமாகக் காட்டினரே யல்லது *வ்யஸநேஷு மநுஷ்யாணாம்* இத்யாதியான அயோத்யாகாண்ட ச்லோகத்தை ப்ரமாணமாகக் காட்டினரல்லர். அது உண்மையில் குணப்ரகரணத்திலுள்ளதாதலாலும், அபிநயரூபமன்றாதலாலும், ஸகல பூர்வாசார்யர்களும் பகவத் குணநிரூபணத்திற்கு அதைத் தலையான ப்ரமாணமாக எடுத்துக்காட்டுகிற படியாலும் அதற்கு யாதொரு கண்ணழிவும் சொல்லப் போகாது. ஆகவே, அசக்தனைப் போல் பாவனை காட்டின அவதாரத்திலுள்ளதெல்லாம் வேஷங்கட்டி ஆடினபடியென்று சில அறிவிலிகள் நினைப்பது போல் நீயும் நினைக்கத் தகாது. அப்படியாகில் அவதாரங்களில் நடந்தவற்றில் ஒன்றையும் ப்ரமாணமாக வெடுத்துக் காட்டவே கூடாது. "**நணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்**" என்ற ஸ்ரீஸூக்தியும் விப்ரலம்பக வாக்யமாகும். இதைப்பற்றி இன்னமும் வெகு விரிவாகச் சொல்லவேண்டியதுண்டு. அதற்கு மற்றொரு ஸமயம் ப்ராப்தமாகும்.

இனி உன் மூன்றாவது சங்கைக்குப் பரிஹாரம் சொல்லுகிறேன். ஆநந்தமயத்வமும் கல்யாணகுணசாலித்வமும் பர்யாய மாகுமோ? என்பது உனது சங்கை. "**पश्चाच्छब्दो नास्तिपर्याय एव**—பச்சாச்சப்தோ நாஸ்தி பர்யாய.ஏவ" என்கிற முறையும் ஒன்றுண்டு என்பதை நீயு மறிவாய். அந்த முறையே இங்குக் கொள்ளத் தக்கது. நிரங்குச ஸ்வதந்திரனான ஸர்வேச்வரனுக்கு உண்டான பாரதந்த்ர்யமானது விருத்தமன்று என்று சொன்னால் இது எப்படி கூடும்? ஸ்வாதந்த்ர்யம் என்பது ஆனந்த ரூபம், பாரதந்த்ர்யமென்பது துக்க ரூபம். இதில் விவாதப்பட நியாயமில்லை. ஸ்வதந்த்ரனாயிருந்து ஆனந்தப்படுகிற பகவான் பரதந்த்ரனாயிருந்து ஏன் துக்கப்படவேண்டும்? என்று கேட்டால் இதற்கு என்ன ஸமாதானம் தேறுகிறதென்று பாராய். "**सर्वं परवशं दुःखम्**— ஸர்வம் பரவசம் துக்கம்" என்றபடி பாரதந்திரியம் துக்கரூபமேயானாலும் ஸ்வாதந்திரியமடியாக வுண்டான பாரதந்த்ர்யம் துக்கரூபமன்று என்று கூறவேண்டும். வஸ்துதோ துக்கமானது தானே ஹேது விசேஷத்தினால் ஆனந்தமாக ஆய்விடுகிறதென்றும், வஸ்துதோ துக்கரூபமான அந்த பாரதந்த்ர்யத்தினால் ஆநந்தமயத்வத்திற்கு ஹானியில்லையென்றும் சொல்லியாக வேண்டும். ஆனால் நம்முடைய பர்யாயதா வாதம் இது கொண்டன்று. எம்பெருமானுக்கு எத்தனையோ குணங்களிருக்க அவற்றையெல்லாம் விட்டு உபநிஷத்து ஆனந்தத்தைப் பற்றிக்கொண்டு "**यतो वाचो निवर्तन्ते**" என்பானேன்? என்று ஆலோசிக்க வேண்டும். உலகில் அளவுகடந்த ஆனந்தம் யார்க்கு உண்டாகும்? ஒன்றாலும் ஒரு குறையுமில்லாதவற்கே அது உண்டாகும். அதை ***யுவா ஸ்யாத்*** என்று தொடங்கி உபநிஷத்தே காட்டி யிருக்கின்றது. ஏவஞ்ச, ஆநந்தமயத்வம் சொன்னதானது ஸகல கல்யாணமும் நிரம்பியிருக்கின்றமையைச் சொன்னதாயிற்று. ஆகவே, ஆநந்தமயத்வமும் கல்யாணைகதாநத்வமும் பர்யாயமென்றதாயிற்று. இதை ஆழ்வானுடைய [ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில்] இரண்டு ச்லோகங்கள் மூதலிக்கின்றன.

"अभ्युद्यता तव युवत्वमुखैर्गुणौघैरानन्दमेधितमियानिति संनियन्तुम् ।
ते ये शतं त्विति परम्परया प्रवृत्ता नैवैष वाङ्मनसगोचर इत्युदाह ॥

एवं तया चतुरया तव यौवनाद्यास्सर्वे गुणास्सह समस्तविभूतिभिश्च ।
अव्याहतास्स्युरवधीनवधीरयन्तो वाचामगोचरमहामहिमान एव ॥"

என்று. ஆனந்தமயத்வத்திற்கு எதிரானது ஹேய குணவத்த்வமே யல்லது வேறொன்று மாகாது. ப்ரக்ருதமான சோகம் ஹேய குணமன்றென்றும் கல்யாண குணமேயென்றும் ஸ்ரீராமாயணமே ஸ்பஷ்டமாகக் கூறியுள்ளதனால் நாம் சொன்னது ஸர்வம் ஸமஞ்ஜஸமென்று இப்போதாவது தெளிவு பெற்றாயா?

சிஷ்: மிகத் தெளிவு பெற்றேன். விஜ்ஞாபித்த மூன்று ஸந்தேஹங்களும் நிச்சேஷமாக நிவ்ருத்தமாயின. வேறு சில ஸந்தேஹங்களை விஜ்ஞாபிக்கிறேன். "அடியேன்மீது தயை பண்ணவேணும்" என்று பகவானை நோக்கியும் பாகவதர்களை நோக்கியும் ப்ரார்த்திக்கிறோம்; "பகவான் இன்னாருக்கு தயை பண்ணினான்" என்றும் சொல்லுகிறோமே; இவ்விடங்களில் தயையென்பது பரதுஃக்க துக்கித்வ ரூபமாகுமோ? 'எனக்கு தயை பண்ணவேணும்' என்றால் 'என் துக்கத்தைக் கண்டு நீயும் துக்கப்படவேணும்' என்பது பொருளன்றே; 'த்ரௌபதிக்கு தயை பண்ணினான் பகவான்' என்றால் அவளுடைய துக்கத்தைக் கண்டு துக்கித்தானென்பது பொருளன்றே. ஆகவே இவ்விடங்களில் தயாபதார்த்தம் வேறாகத் தானே யிருக்கவேண்டும்.

ஆசா: சாஸ்த்ரஜ்ஞர்களின் கொள்கைகளில் '**கார்யே காரணோபசாரம்**' என்பதும் ஒன்று. அந்த முறையில் இங்கு நிர்வாஹம். 'என் திறத்தில் தயைபண்ணவேணும்' என்பதற்கு— என் துக்கத்தைக் கண்டு உண்டான துக்கத்தினால் என்னை ரக்ஷிக்கப் பார்க்கவேணும் என்பது பொருள். எவ்வெவ்விடங்களில் தயாபதமானது தன்னுடைய முக்யசக்தி லப்யமான அர்த்தத்தில் [சோக ரூபமான பொருளில்] விச்ராந்தமாக மாட்டாதோ அவ்வவ்விடங்களில் கார்யே காரணோபசாரமென்று கொண்டு தத் கார்யமான ரக்ஷணம் வரையில் பொருளாகக் கடவது. தயா என்கிற வட சொல்லின் ஸ்தானத்திலேயே தமிழில் இரக்கமென்கிற சொல் உள்ளது. இரக்கமென்றாலும் சோகமென்றாலும் துக்கமென்றாலும் நிர்வேதமென்றாலும் பர்யாயமே. திருவாய்மொழியில் "என்றென்றே நைந்திரங்குமே" "இரங்கி நாடோறும் வாய் வெரீஇ" என வருமிடங்களில் சோகமேதான் பொருளாக வுரைக்கப் பட்டுள்ளது. "ஆவா வென்று அடியேற்கு இறை யிரங்காய்" "வாணனுக்கு இரங்கின னெம்மாயனே" என்னுமிடங்களில் தத்கார்யமான ரக்ஷணமே பொருளாக வுரைக்கப்பட்டுள்ளது.

சிஷ்: ஸ்வாமிந்! மிகப் பொருத்தமான ஸமாதானமே யிது. நல்ல தெளிவு பெற்றேன். கத்ய பாஷ்யத்தில் காருண்ய மென்பதை விவரிக்குமிடத்து "परदुःखदुःखित्वादिकं तु न लक्षणम्; अव्याप्तेरतिव्याप्तेश्च— பரதுக்க துக்கித்வாதிகம் து ந லக்ஷணம்; அவ்யாப்தே: அதிவ்யாப்தேச்ச" என்று தேசிகர் பணித்த விஷயத்தில் தெளிவு பெற விரும்புகிறேன்; அருளிச் செய்யவேணும்.

ஆசா: இங்கு சாஸ்த்ரஜ்ஞர்கள் விமர்சிக்க வேண்டுவது மிகவுண்டு; எப்படி அவ்யாப்தி; எவ்விடத்தில் அதிவ்யாப்தி என்று காட்டப்பட்டிருக்கவில்லை.

தார்க்கிக ஸிம்ஹம் இந்த தோஷங்களைக் கூறியிருக்கிறபடியாலே இவை இருந்து தீரும். ச்ருதப்ரகாசிகாசார்யர் முதலான முன்னோர்கள் பணித்த ஸ்ரீஸூக்தியின் மீது இந்த தோஷங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அஸ்து. லக்ஷ்யைக தேசத்தில் லக்ஷணமில்லாமை அவ்யாப்தி யெனப்படுகிறது. ப்ரக்ருதத்தில் இதை யுபபாதிக்கும் வழி தெரியவில்லை. லக்ஷ்யத்திற் காட்டில் வேறுபட்டதொரு குணத்தில் இந்த லக்ஷணம் இருக்குமானால் அதிவ்யாப்தியாகும். அப்படிப்பட்ட குணம் இன்னதென்றும் தெரியவில்லை. ஆனாலும் தார்க்கிக ஸிம்ஹ ஸூக்தியாகையாலே அவரால் ஆபாதம் செய்யப்பட்ட இரண்டு தோஷங்களும் பொருந்தியுள்ளன வென்றே கொண்டு உனக்கு விஷயம் சொல்லுகிறேன். இந்த கத்யபாஷ்ய ஸ்ரீஸூக்தியினால் பரதுக்க துக்கித்வமென்கிற குணம் எம்பெருமானிடத்தில் இடமாக வுள்ளதென்று கல்வெட்டாகத் தேறி நிற்குமே யல்லது பிறருடைய மதம் ஜீவிக்க வழியே யில்லை. இதை நானே உபபாதிப்பதைவிட, மேதாவியான நீ என் கருத்தையறிந்து உன் வாயினாலேயே உபபாதித்தாயாகில் கேட்டுக் களிப்பேன்.

சிஷ்: அடியேன் தேவரீருடைய திருவுள்ளத்தை நன்கு க்ரஹித்துக் கொண்டேன்; மிகவும் தெளிவு பெற்றேன்; ஆனந்தமாக உபபாதிக்கிறேன். அதிவ்யாப்தி, அவ்யாப்தி என்றிரண்டு தூஷணங்கள் இங்கே கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதிவ்யாப்தியை இங்கு உபபாதிக்க வேணுமானால் எம்பெருமானுடைய வேறொரு திருக்குணத்தில் இந்த லக்ஷணமிருப்பதாக உபபாதிக்க வேண்டும். எங்கேயாவது உபபாதிக்கப்படட்டும். இந்த லக்ஷணம் லக்ஷ்யத்திலும் அவசியம் இருந்து தீரவேண்டியதாயிற்று. லக்ஷ்யத்தில் இது அடியோடு இல்லையென்னில், அஸம்பவமென்கிற தூஷணம் கொடுத்து ஒரே வார்த்தையில் முடிக்கவேண்டுமே யொழிய அதிவ்யாப்தி யென்றும் அவ்யாப்தி யென்றும் வாய்திறக்க வொண்ணாததன்றோ. அதிவ்யாப்தி கூறியதனால் நமக்கு இரண்டு லாபமாயிற்று. இதுவரையில் பரதுக்க துக்கித்வமென்பது காருண்யத்திற்கு மாத்திரம் ஸ்வரூப மென்றிருந்தோம். மற்றொரு குணத்திற்கும் இது ஸ்வரூபமென்று திடப்படுத்தினமை தேறிற்று இப்போது. ஆட்டுக்கு லக்ஷணம் சொல்லவந்த வொருவன் **விஷாணவத்த்வம்** [கொம்புடைமை] லக்ஷணமென்றான்; மற்றொருவன் கலஸ்தநவத்த்வம் [கழுத்தில் முலையுடைமை] லக்ஷணமென்றான். இவ்விரண்டிலும் தூஷணம் சொல்லவே நேருகின்றது. முந்தினதில் அதிவ்யாப்தியும் பிந்தினதில் அவ்யாப்தியும் அசைக்க முடியாத தூஷணமன்றோ. ஆனாலும் ஆட்டுக்குக் கொம்புடைமையும் கழுத்தில் முலையுடைமையும் கிடையவே கிடையாதென்று இதனால் தேறிவிடுமோ? கிடையாதென்று தேறாததோடுகூட, அவை அவசியமுண்டென்பதும் நன்கு தேறும். எதனால்? அஸம்பவ தூஷணம் கொடாமையினால். முயலுக்கு லக்ஷணம் சொல்ல வந்த வொருவன் **விஷாணவத்த்வம் லக்ஷணம்** என்றானாகில் அப்போது யாராவது அதிவ்யாப்தியையும் அவ்யாப்தியையும் தூஷணமாகக் கொடுக்க முன்வருவதுண்டோ? அப்படியாகில் சில முயல்களுக்காவது கொம்பு உண்டு என்று தேறிவிடுமே. அது அபஹாஸ்யமாகுமே. ஆகவே ப்ரக்ருதஸ்தலத்தில் தேசிகர் அஸம்பவ தூஷணம் கொடாமல் அதிவ்யாப்தியையும் அவ்யாப்தியையும் தூஷணமாகக் கொடுத்தமையால் காருணிகனான எம்பெருமானிடத்தில் பரதுக்க துக்கித்வம் உள்ளவே யுள்ளது

தான் என்று நன்கு தேறி நின்றது. இவ்வளவே யன்றோ தேவரீருடைய நிரூபணம்.

ஆசா: ஆம்; என்னுள்ளத்தை நீ நன்கு க்ரஹித்து மிக நன்றாக உபபாதனம் செய்ததுபற்றி மிகவும் உகக்கிறேன்.

சிஷ்: இது எப்படியாவது இருக்கட்டும்; "பரதுக்க துக்கித்வாதிகம் து ந லக்ஷணம்" என்று இது மறுக்கப்பட்டு விட்டதன்றோ? என்று இதை யொரு பெரிய விஷயமாகப் பிறர் கூறுவர்களே. இதற்கும் தகுந்தபடி தேவரீர் பதிலுரைத்தருளவேணும்.

ஆசா: பரதுக்க துக்கித்வ மென்பதைக் காருண்யத்திற்கு லக்ஷணமாகச் சொல்லவேண்டாமென்று சொல்லிவிட்டதனால் என்ன முழுகிப் போயிற்று? இதனால் அந்த குணத்திற்குச் சிறிதும் கண்ணழிவு தேறாதே. ஒன்று பார்; "அந்தணன் யாவனென்னும், வேத மோதினவனும் ச்ரௌத ஸ்மார்த்த கர்மங்களை வழுவாது செய்பவனும் அக்நிஹோத்ரத்தை அநுஷ்டிப்பவனும் ஸத்யத்தில் உறுதியுள்ளவனும் பரஹித சிந்தை யுள்ளவனும் யாவனோ அவனே அந்தணன்" என்று ஒருவர் சொல்லுகிறார். இதைக்கேட்ட வொரு மஹாதார்க்கிகர் இதில் அதிவ்யாப்தியையும் அவ்யாப்தியையும் கூறி தூஷிக்கிறார். இதனால் என்ன ஆபத்து வந்து விடுமென்று பார்க்கவேணும். வேதமோதுதல் முதலியவற்றை அந்தணனுக்கு லக்ஷணமாகச் சொல்லக்கூடாதென்று விதிக்குமே யொழிய வேதமோதுதல் முதலானவை ஹேயமென்றாவது அவை அந்தணர்களிடத்தில் அடியோடு இல்லையென்றாவது சொன்னதாகத் தேறிவிடுமோ? தத்வமுக்தாகலாபத்தில் "तर्कालम्बि-गोष्ठ्यां भजतु बहुमति तावकी लाघवोक्तिः" என்று ஸ்வாமி தாமே ஸாதித்த கட்டளையில் தார்க்கிக கோஷ்டியில் வாதம் எப்படியாவது இருக்கட்டுமே. குணநாக்தர்கள் அந்த வாதங்களைக் குறிக்கொள்வார்களோ? 'நாம் அநுபவிக்கும் பகவத் குணம் தர்க்கசாஸ்த்ரத்தோடு பொருத்தமுடைத்தா? என்று ஆராய்ந்து பார்த்தோ குணரஸிகர்கள் குணநுபவம் செய்கிறார்கள்? அநுபவரஸிகர்களின் அருகே வருவதற்கு தார்க்கிகர்களுக்கும் வையாகரணர்களுக்கும் என்ன உரிமை?

இந்த விஷயத்தில் சர்ச்சை இவ்வளவு போதும்; பரதுக்காஸிந்ந துக்கவத்த்வம் என்று பிறர் சொல்லுவதில் ஸித்தாந்தத்திற்கு ஒரு ஹாநியில்லை, அவர்களுக்கும் ஒரு லாபமில்லை — என்பது முக்கியமான விஷயம். திருவாய்மொழி எட்டாம் பத்தில் முதல் திருவாய் மொழியின் அவதாரிகையில் [ ஈட்டில் ]

"ஸ்வக்யதிரிக்த ஸமஸ்த வஸ்துக்களும் தனக்கு ப்ரகாரமாகத் தான் ப்ரகாரியாய் இவற்றுக்கு வந்த வ்யஸநம் தனக்குவந்ததாக நினைத்திருக்கும்....."

என்று அருளிச் செய்திருக்கையாலும் இது பரதுக்காஸிந்ந துக்கவத்த்வ ப்ரதிபாதகமே யாகையாலும் இச் சொல்லின் கருத்தறியாதே * ஜரத்கவ: கம்பள பாதுகாப்யாம் இத்யாதி ப்ரக்ரியையிலே ஒன்றோடும் ஸங்கதமாகாதபடி எதையோ நினைத்து எதையோ எழுதுவதும் பேசுவதுமாக இருப்பவர்களுடைய துர்வாதங்களினால் நீ

கலங்கக்கடவையல்லை. ஸந்த்யாகாலம் ஸமீபித்திருப்பதால் அநுஷ்டானத்திற்குச் செல்வோம். நாளைக்கும் வருக; இப்படியே ஒவ்வொரு விஷயத்தையும் பற்றிப் பேசி யுகப்போம்.

முற்றிற்று.

---